உ

சிவமயம்.

பெரியநாயகி துணை.

திருப்பாதிரிப்புலியூராகிய திருப்புலிசைப்

# பெரியநாயகி

# பிள்ளைத்தமிழ்.




இது

கடியாபட்டி என வழங்கும்

இராமச்சந்திரபுரம்

திருவாளர். தீ. நா. முத்தையசெட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி,

காரைக்குடி,

பிரமஸ்ரீ சதாவதானம், பாலசுப்பிரமணிய ஐயர்

அவர்களாலியற்றப்பெற்று,

யாழ்ப்பாணம் பருத்தித்துறை தும்பைநகர்,

மு. சின்னைய சாத்திரியாரால்

திருத்தப்பெற்றது;

மேற்படி ஐயரியற்றிய பாடலேசர் தோத்திரத்துடன்,

சு. பழனியப்பச்செட்டியாரால்,

பதிப்பிக்கப்பெற்றது.



லாலி எலெக்டிரிக் அச்சுக்கூடம், கருணாநிதி வைத்தியசாலை,

தஞ்சாவூர்.

துந்துபி-ஸு.

1922.

சிவமயம்.

# திருப்புலிசைப் பேரியநாயகி பிள்ளைத்தமிழ்

## விஷய அட்டவணை.

14-2

## அவையடக்கம்.

சீரேறு வேற்படைச் செம்மலருள் பெற்றமுனி
செய்தவிய னூலி னோடு
செப்புமற் றோர்களிய னூல்வழங் கியமையுந்
தேர்ந்தநுண் ணியபுலவ ரே

நீரேறு செஞ்சடைக் கடவுளொரு பான்மேவு
நேரிழைந லங்க யற்க
ணிமலைமேற் குமரகுரு பரசாமி முன்னு
ணிகழ்த்திட்ட பாவ ழங்கும்

பாரேறு மினியசெந் தமிழ்மண்ட லத்தியான்
பகரநெஞ் சுன்னு பிள்ளைப்
பாவினி லுறும்பிழையை நோக்காது கெள்ளுவீர்
பண்பினு லெனம கிழ்ந்து

காரேறு சோலையும் பொறிமதிலு மாடமுங்
கழனியுஞ் சூழ்ந்த புலிசைக்
கண்ணுள்ள பெரியநா யகியெனும் பரைமீது
காணுதற் கூக்கி னேனே.



சிவமயம்

## சிறப்புப் பாயிரம்.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தலைமைத் தமிழாசிரியர்

### திருவாளர் வா. மகாதேவ முதலியார்

இயற்றியது.

---

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொன்னாடு மங்கையர்பா லாசை நீத்த புரவலனூர் கரையேறு புலிசை [மேவும்
வின்னாடு நுதற்பெரிய நாய கிக்கு வியன்காரைக் குடிப்பால சுப்ர [மண்யன்
மன்னாடு புலமையுடை மறையோன் சொற்ற வண்பிள்ளைத் தமிழ் [நூலவ் வான்ப திக்கட்
கொன்னாடு துந்துபிவை காசி நன்னாள் குலவவரங் கேற்றினனாற் [குறிக்கொள் வீரே. (க)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொதுக்கோட்ட மில்லவரா நல்லவர்வாழ் நற்பாண்டிப் பொற்பார் [நாட்டி
லிதுக்கோட்டை யில்லென்றே யறிஞரெலாம் வியக்கின்ற வெழிலின் [மிக்க
புதுக்கோட்டை யுண்ணிலவு ராமச்சந்த்ர புரத்துவரு புண்ய மேலோன்
விதுக்கோட்டை யராச்சுற்றும் விரிசடையாற் கன்பு செயும் விருத்தி [மிக்கான். (உ)

ஆவிற்கு மாதுலர்க்கும் பசிதாகந் தீர்த்தற்கா மறங்கள் பல்ல
மாவிற்கு மலைகுனித்தான் திருக்கோயிற் பணிபல்ல மகிழ்ந்து செய் வான்
பாவிற்கு விரைந்தளித்தல் புகழ்வாங்கப் பொன்றராப் பண்புகொண்டு
பூவிற்கு மரைபோலக் கொடையாளர் தமிற்சிறந்த போச மன்னன்.()

சீரகத்தா ரணிவசியன் வயிரவன்கோ யிற்பகுப்பன் றேவ தேவ
னேரகத்தா னெழிற்றந்தை யடிபரவு தீத்தப்ப வேந்தல் பேரன்
நாரகத்தார் நயம்பேசி நயந்துவியந் தெஞ்ஞான்று நாடி நின்ற
காரகத்தார் கைந்நீண்ட நாச்சியப்பன் றருமதலை சரிசி லாதான். (சு)

பூத்திருந்து மகமர்ச்சி முகமலர்ந்து மித்தெரிப்பப் புனையோன் றில்லா
நாத்திருந்து மின்னுரைகள் வழங்கவீந் தின்முகத்தை நாடு கின்ற
பாத்திருந்து மியல்பினன்முத் தையனிது செய்வித்தான் பாரி னீடு
மாத்திருந்து நன்மக்கட் பேறநீஇ மகிழ்ந்தினிது வாழ்க மாதோ. (ரு)



உ

சிவமயம்.

சிறப்புப் பாயிரம்.

யாழ்ப்பாணம் பருத்தித்துறை தும்பைநகர்

## முருகப்பவேள்—சின்னைய சாத்திரியார்

இயற்றியது.

---

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வீறுகொள் பெற்ற முதலமுந் நிரையு மிக்கவர் மேன்மைவாழ் வெ
[னினுஞ்
சீறுமும் மதத்தச் சிந்துர முதலாந் திருவுறு மன்னர்வாழ் வெனினுங்
கூறுநன் மகவுப் பேற்றினே நன்றாங் குமரன்றாய் மேற்பிள்ளைக் கவிநா
டேறுபல் புகழாய் செய்விப்பி னதனை யெய்துவை யெனமுன்னோ
[ரியம்ப. (க)

இந்திரை யருள்சேர் வண்மையான் மாட விராமச்சந் திரபுரம் வாழ்
[வோன்
கந்தனின் ஞதை யாலயப் பணியும் பிறவீறுங் கருதிமுன் செய்து
வந்தமன் ஞச்சி யப்பனற் றவத்தால் வந்தவேண் முத்தைய னறிந்து
செந்தமிழ்ப் புலிசைப் பெரியநா யகிமேற் செப்புக பிள்ளைப்பா
[வென்றே. (உ)

உரைத்திட நெஞ்சத் தோங்கிய மகிழ்ச்சி யுறப்பால சுப்பிர மணியன்
றிரைத்திடக் காரைக் குடியினன் செய்து தேவர்யா வர்க்குமே லாமவ்
வரைத்தனி மகளின் சன்னிதி யடைந்து மன்னுவித் தவனெடு புலவர்
நிரைத்துர வெடுத்து வாசித்துக் கருத்து நிகழ்த்தின னென்பரான்
[மன்னே. (௩)

திருமக டழுவு மார்பத்த மயற்குஞ் சேனகர் மன்னற்கு முன்னுட்
பெருமைகொள் பதமும் வலிமையும் பிள்ளைப் பேறுந்தந் தருளிய
[வம்மை
மருமலர் செய்யுண் மாலைமேற் புனைந்து வணங்கிடு மவற்கொரு மகவு
தருமெனச் சொலவும் வேண்டுமோ பெற்றுத் தரணியி லூழிவா
[ழியவே. (௪)



உ

சிவமயம்.

## சிறப்புப் பாயிரம்.

தஞ்சைமாநகர் ஆயுள்வேத பண்டிதரும் தமிழ்ப்பாவலருமாகிய

### த. கி. வேங்கடசாமி நாயுடு அவர்கள்

இயற்றியது.

---

நிலைமண்டிலவாசிரியப்பா.

அங்கட லுடுத்த—வகனில வளாகந்
தங்குபல் லுயிர்க்குந்—தலைமையாம் மானிட
ரென்கைவெந் நிரையத்—திற்போந் தோர்ந்தவி
ரன்பிற் பூப்புடை—யரும்பெறன் மகப்பொரு
ளீண்டுறு தவத்தா—னெய்தலா னென்ப
தூண்டிய சுடரிற்—றுலங்கறி வாளரச்
சொன்னிலை தனக்கு—முன்னிலை யாவான்
றுன்னிய பல்வளந்—தோன்று மிராமச்
சந்திர புரம்வாழ்—சன்மதி யோர்புகழ்
நந்தாச் செல்வ—நலமலி மூன்றுங்
குடிக்கு முடியெனக்—குலவுமுத் தைய
னடுக்கிய புகழா—னகத்தக முன்னுபு
தெய்வத் துணைவலிச்—சேர்க்கையா னியாவுங்
கைவருஞ் சூழ்ச்சி—கடைப்பிடித் தென்று
மன்னங் கண்படு—மாழநீர்ப் பணைவாய்ப்
பொன்னஞ் சுணங்கொளி—பூத்த புணர்முலை
யுழத்தியர் வதனத்—தொளிமுழு மதியென
விழுத்தகக் கைரவ—வீமுகை விண்டிடு
புலிசைப் பதியமர்—பொற்கரப் பைங்கிளி
மலியின் னிசைசெறி—மன்னுடைந் தமிழான்

மூவா முதல்வன்—முழுநலந் தன்னை
யோவா துரைக்கு—முரிமையிற் றுங்கிய
பெரியநா யகிக்குப்—பிள்ளைத் தமிழ்ப்பாப்
பருவமீ ரைந்தும்—பாடித் தருகென
வேண்டின னன்னுன்—விரும்பும் பொருளொடு
காண்டகு நிதியமுங்—கையுறு மாறு
கண்டா ரமுதங்—கண்டெனவுவப்ப
விண்டா னெவனெனில்—விளம்புது ம்யாமே
திருமகண் மருமகள்—சேர்ந்து நடஞ்செய்
தருள்புரி காரை—யணிநக ருறைவோன்
மறையோர் குலத்து—மணியென மிளிர்வா
னிறைவற் போற்று—மிளையான் றண்ணிணைப்
பதாம் புயத்தைப்—பன்னுட் டுதித்துச்
சதாவ தானஞ்—சாற்றியல் பால
சுப்பிர மணியச்—சுகுண னெஞ் ஞான்றுந்
தப்பிலாத் தூய்மைத்—தவப்புல வோனே.



உ
சிவமயம்

# சிறப்புப் பாயிரம்.

## கரைக்குடியில் வசிக்கும் தமிழ் வித்துவான், நா. சு. நாராயண பிள்ளையவர்கள் இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூவாழு மக்கள்கடம் பெரும்பேற்றை யாராயிற் புலவோர் போற்றும்
பாவாகுந் திருக்குறளிற் பகர்ந்துளார் நாயனுர் பன்னூற் றேர்ச்சி
யோவாத வொருபுதல்வற் பெறுவதே யெனவதனை யுளத்தி லோர்ந்து
தாவாத திருநடஞ்செய் ராமச்சந் திரபுரத்தின் றவத்தான் வந்தோன்.

வாணிகநற் குலத்தொளிரு முத்தையவேண் மதிவலார்ச் சேர்ந்து [தண்ட
பாணிபதந் தினந்துதிநற் பாலனையா னுறுவண்ணம் பகர்வீ ரென்ன
வேணியரன் றனைப்போற்று மெய்யடியார் வாழ்காரைப் பதியின் [மேலாம்
வாணியரு ணிறைந்துசக்ர பாணிமருகனைப்புகழ்ந்து வரத்தி னாலே.

சதாவ தானஞ்செய் பாலசுப்ர மணியனெனு மறையோன் [சார்ந்தோர்க்
கிதோப தேசஞ்செய் நன்மனத்தோ னியாப்பணிக ளெவையுந் [தேர்ந்தோன்
மதாபி மானமொடு தேசாபி மானியவன் வாக்கா லன்பர்க்
கெதாகினு முதவு மிறைவிபிள்ளைத் தமிழ்ப்பாட லேற்று வாழ்வாய்.

என்றலுங்கேட் டுவந்துவந்து செழியதிருப் புலிசை நகர்க் கிறைவி [யாகி
நன்றருளும் பெரியநா யகிதனக்கோர் பிரபந்த நலம தாய்ச்செப்
தென்றனுளக் குறைமுழுது மகற்றுவீ ரெனவேண்ட வினிய சாந்தக்
குன்றிருந்த தமிழ்முனியும் புகழ்ந்துவப்பக் கூறினன் குறிக்குங் [காலே

குமரகுரு பரனருள்செய் வாகசென்கோ குமரனே யுருவாய் வந்து
சமரசநன் னிலையுணர்த்து சம்பந்தன் வாக்கென்கோ தாரு நீழ
லமரர்குரு வாக்கென்கோ வரியதிது மரிதிதன்ற னழகு நோக்கிற்
சமரபுரிக் குமரனே வழுத்திடு னெனவகுக்குந் தகைமைத் தாமே.



உ
சிவமயம்.

பிரமஸ்ரீ திரு. நெடுவை,

## இராமஸ்வாமி ஐயங்காரவர்கள்,

இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தன்றுயூட் டிய ஞானத் தனிப்பாலை முப்பாலாய்த் தமிழென் றுக்கிப்
பின்றுத வாசையிலப் பெரியவட்கு வேளருத்தும் பெற்றி மான
நின்றுளு மரகுவிழை முத்தையமால் பத்தியினில் நிமிர்ந்த செல்வ
நன்றுகும் புலிசைநகர் நாதர்மகிழ் பெரியளரு ணுடி மன்னே

ஒன்பானற் சுவைகலந்துள் ளுணர்வொளிர மனமிளர வுலகோர் யாருந்
துன்பான்மே வியநிலையைத் தொடராமே திடமான சுகமுற் றேங்கத்
தென்பானற் குருமணியுந் தேடுகவி பாலசுப்ர மணியன செய்த
வின்பாவின் றேனெழுகும் பிள்ளைத்தமிழ் பெருந்தமிழா யிசைந்த
[தம்ம.



உ
சிவமயம்.

## ஸ்ரீ அசலாம்பிகையம்மாள்,

இயற்றியது.

---

### வெண்பா.

சீரைக் குடியாகச் செய்யுமறச் செல்வநிறை
காரைக் குடிவாழ் கவிஞரிறை—பாரைத்
திரியிரதஞ் செய்தோன் றிகழ்புலிசை யாகும்
புரியிரத மூறப் புகழ்ந்து.

கொள்ளைக் கவின்பெருகுங் கோப்பெரிய நாயகிமேற்
பிள்ளைக் கவியொன்று பேசினன்—விள்ளுசதம்
பேசும வதானியெனப் பேர்திகழ் மென்றுதை
பூசுரனுள் ளன்பிற் புணர்ந்து.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நற்றவ ருளத்தி னினித்திடுந் தாதை
நல்லுப தேசமேற் றிடவே
யுற்றவப் பால சுப்பிர மணிய
னெருபெயர் புனைந்தமைக் கேற்ப

விற்றைநா ளீன்ற பெரியவ டனையு
மிசைத்தனன் பிள்ளையா யுலகிற்
பெற்றவர் மகவி னுசையாற் குற்றம்
பிடிப்பரோ பிழைபல செயினும்.



உ
சிவமயம்.

## இந்நூலாசிரியர் சகோதரர் காரைக்குடியிலிருக்கும், மழவை அஷ்டவதானம், சிலேடைப்புலி, பிரமஸ்ரீ சித, சாமிநாதையரவர்கள், இயற்றியது.

---

வெண்பா.

பால கவியிசைத்த பாலகவி யூர்வாலை
மேலை நலங்களுயிர் மேவவே—பாலை
நவில்பருவத் தாற்பெரிய நாயகியாய்ப் பூமே
லவதரித்தாள் மீபேரருளி னால். (க)

வந்துகலி தீர்ப்பாண் மனம்போல் வரமெல்லாந்
தந்துகளி சேர்ப்பா டடையில்லை—யிந்த
நிலத்தன்பர் வன்பிணிக ணீக்கப் புலிசைத்
தலத்துமகிழ் வாயமருந் தாய். (உ)

பொருட்கவியா னல்ல பொருளைப் பெறுவா
னருட்பெரிய நாயகித்தா யன்பாற் றிருப்புலிசை
நற்பணிகொள் போன்பி னுலுந் தரமகிழ்வான்
வற்சரத்துண் முத்தயரா மன். (ங)

திருப்பா திரிப்புலியூர்ச் சீர்ப்பா திரிநா
தருமகிழ்ந்தே பிள்ளைத் தமிழ்க்குப்—பொருள்பெருக
நல்வரந்தந் தார்பெரிய நாயகியன் பிற்குரிய
சொல்விருப்பு சம்பு சுயம்பு. (ச)



உ

சிவமயம்.

# திருப்புலிசைப் பெரியநாயகி

# பிள்ளைத்தமிழ்.

காப்பு.

திருமங்கை யெண்மருஞ் செங்கமல மகலாது
திகழவெண் கமல மலர்மேற்
றிகழுநா மகளுநற் கல்விபொன் முதலமிகு
சீர்ப்பா திரிப்புலி நலூர்

மருவியடி யார்மன விருப்பநிறை வேற்றுஞ்சு
மங்கலையை மங்கல மெலாம்
வடிவெடுத் தனையசீ மாட்டிபெரு மாட்டிமதி
வதனசுந் தரியை வானத்

தருவும்வெட் குங்காத லப்பெரிய நாயகித்
தாயான பச்சை மயிலைச்
சங்கான் றேவிதனை வாழ்த்துமென் கவிதழையத்
தலைகொண்டு பணிதல் செய்வாம்

பெருமைசெறி பாரதங் கொம்பினுன் மேருவிற்
பிறங்குமா பொறிமோ தகப்
பிரியனு கியயானை முகவிநா யகனெனும்
பிஞ்ஞகன் றன்சு தனையே.



முதலாவது

## காப்புப் பருவம்.

### திருமால்.

அன்னைவர மீயென்று தேவர்குழு பணிசெய்ய
வப்பணிக் கொப்பி னேடே
யளவுமில் வாமுதவி யாதரித் தொண்கயிலை
யமருஞ் செயற்கி ணங்கத்

தென்னைத் தருக்கணெடு வீதியிரு பாலுமேற்
சென்றுகாட் டிளநீர் கடாந்
தினகான் றேரிற்செ றித்தபரி வேகமாய்ச்
செல்போழ்தி னிடற விண்டு

மன்னுமழை யென்னநீர் சிந்துமாற் றுல்வயலின்
மதுரகுண சாலி மல்கு
மற்புலிசை தனிலன்பர் மெய்ப்பணியை யினிதேற்று
வரமீந் திருக்கு நிதியைப்

பின்னையென் னன்னைதன் னன்னலம் பருகுவோன்
பேணுவோன் வேணு கானம்
பெரியவர்க ளருமையொடு பாவுமொரு கரியமுகில்
பிரியமுள ளுய்க்காக் கவே. (க)

### சிவபெருமான்.

பாயநீர்த் தாமரைத் தேனூறு மலரில்வாழ்
பகவன்று முன்பு செய்த
பலவினையு நோக்கியே தக்கபடி தந்தவிப்
பாரிலுட லோடு வாழு

மாய்வாழ் வினைநம்பி நல்வழியி னடவாத
மதியிலா மாக்க டாமும்
வாடாத நான்குவகை மலரொடுத் தர்ச்சிக்கு
மதியுள்ள மக்க டாமும்

வீயிலா துயர்தாணி மீதிருந் தேசெல்வ
மிக்கடைந் தழிவி லாத
மேன்மைபெற் றுய்யவொரு நன்மருந் தாய்ப்புலிசை
மேவிய பிராட்டி யுமையைத்

தீயபே யமணர்புரி கொடுமையினை யோட்டியுயர்
சேவடியை முடியி னுட்டித்
திகழப்பர் தமையாண்ட வுயர்வுற்ற புகழ்பூண்ட
சிவபிரான் காத்தருள் கவே. (உ)

## வலம்புரி விநாயகர்.

கவலைமீ றியபவக் கடனடுவி லேநெடுங்
காலமாய் மூழ்கி மூழ்கிக்
கட்டப் படுஞ்சீவர் கரையேற வுஞ்செய்ய
கவிதையுறு தென்மொ ழியினுக்

கவமதே யாதபடி போற்றுமா னவர்தம
தபீட்டநிறை வேறி யணிசா
லம்போதி யிடைதன்னி லுடையாக வமைதனி
னலங்கிருத மாகு மிந்தப்

புவனமே னெடுநா ளிருந்துகரை யேறவும்
பொருவேலை நீந்தி யப்பர்
போந்துகரை யேறவுந் திருமருவு பாதிரிப்
புலியூரில் வந்த தாயைக்

கவனமான் றேர்ப்படைக் கயமுகனை வென்றமரர்
கலியெலா நீக்கி யடியார்
கருதுநெஞ் சுறைவலம் புரிவிநா யகனெனுங்
கடவுடான் காத்தருள் கவே. (௩)

## முருகவேள்.

சண்மதமு முயர்வெனக் கூறிடினு மவைகளுட்
சத்திமத மேயுயர் வெனுந்
தகைமைக் கிணங்குறச் சமண்மதப் பேயராந்
தறுகணர் கல்லோ டிணைத்

துண்மதத் தாற்கடலில் வீழ்த்திய துணர்ந்துமிக்
கோங்களியி னூற்கல் லதை
யுறுபுணைய தாக்கியே கரையேற்றி விடுவலென
வுன்னிவா கீச ஞானக்

கண்மணியை யுயர்புலிசை நகரினிடை யாவருங்
கண்டதி சயிக்கு மாறு
கரையேற்றி விட்டவனை மறைநாற்கு மெட்டாத
கனமோங்கு பெரிய தாயைப்

பண்மொழித் தெய்வகுஞ் சரியையுங் குறவர்மனை
பழகுபச் சைக்கிளி யையும்
பாரியாக் கொண்டவரை யாவலாய்க் கொஞ்சிமகிழ்
பாலகும ரன்காக் கவே. (௪)

## நான்முகன்.

துட்டவரை துளைபடச் சூருரங் கிழிபடத்
தொனிபடுங் கடலு மஞ்சிச்
சுவறுபட வடியவர்கள் கொடியவினை யாவுநிர்த்
தூளிபட நெடிய வடிவேல்

விட்டவரை யன்றுமடி மீதுவைத் துக்கொஞ்சி
விளையாடி முத்த மிட்டு
மென்மழலை மொழிகேட் டுவந்தபசு மயிலன்ன
மெல்லியலை யல்லி மலர்கள்

குட்டமமை வாவியிற் பகல்வாக் கூம்பியே
கொழுநன்வர முகமலர் வுறுங்
கோலநிறை புலிசையிற் குடிகொண்டு மெய்யடியார்
குறைநீக்கு கின்ற தாயைக்

கட்டழகி மொழியழகி யருமறைக ளின்னமுங்
காணாத குணவழ கியாங்
கலைமகளி னினிமையுள நலநுகரு நான்முகன்
கருணையொடு காத்தருள் கவே. (ரு)

## தேவேந்திரன்.

அற்பமுறு மிகவாழ்வை யண்டர்பதி பதவியினு
மதிகமென் றுன்னி நிதியா
ளகைக் குபேரனே நாமென்ன வாழ்த்தியின்
னருள்வாய்மை முதல வாய்ந்த

சற்புருடர் மகிமையறி யாமலே ஞாளிபோற்
றுவித்தா விக்கு ரைக்குந்
தறுகணொடு தனதாயர்க் கிடர்புரியு மடமையோர்ச்
சாராது தனையு ணர்ந்த

விற்பனர்க ளிதயகம லத்தினும் புலிசையினு
மேவியடி யார்க ணெஞ்சில்
வேண்டிய வரங்களைத் தந்துகாத் தருள்பெரிய
விமலையாம் பைங்கிள் ளையைக்

கற்பக நிழற்றவிசி லுற்றரசு புரிகின்ற
காவலன் சசிம ணாளன்
கதிரொளிகொள் வச்சிரப் படையிலகு பொற்காத்
கனவா கனன்காக் கவே. (சு)



திருமகள்.

விண்மணிறை தருபா தலத்துயி ரனைத்தையும்
விருப்பமுட னீன்று மதனன்
மெலிவுறு தளவிலா வரமேற்ற கயமுகனை
வென்றமரா் கலியை நீக்க

வுண்மகிழ்ந் தொருகோட்டு மும்மதத் தும்பியையு
மொருசே யதாக வுதவு
முத்தமியை யத்துவித வத்துவா கிப்புலிசை
யோங்கும் பராசத் தியைத்

தண்மதியை யும்பகைய தாமணிப் பணியையுஞ்
சடைமீ தினிற்பு னைந்த
சங்கரன் பொற்பாட லேச்சுவா னன்போடு
தழுவுமங் களரூ பியைப்

பெண்மணி நிராமயக் கரியமணி மால்கொளும்
பிரியமணி பாற்க டற்கட்
பிறந்தமணி மற்றோ ரிடத்திலொரு நாளுமே
பிறவாத மணிகாக் கவே. (எ)



## கலைமகள்.

கழனிகளி லோடைகளி லேரிகளில் வற்றாத
கமலமே லெண்ணில் கமலங்
கதிர்கொள்விண் மணிதோன்ற மலர்போழ்து நிசியி
கலைமதிய முதய மாக [னிற்

வழலென்னு மாறல்லி விரிபோழ்துங் கண்டுமன
மதிகமகிழ் வெய்த வுலகி
லரியகற் புடைமகளிர் செயல்போலு மிவைகள்செய
லனுவளவு மையமி லெனாத்

தழைவுற்ற வாக்காலு ரைத்தல்போற் பிரமரந்
தாமுழங் கும்புலி சைவாழ்
தாயான பெரியவளை மேலோர்கள் பணிகின்ற
தற்பரையை யொப்பி லாத

பிழையற்ற வாக்கைநால் வர்க்குதவி மதுநதிப்
பிரவா கமாவெ ழுந்த
பெரியகவி மாலையை யரற்காக்கி யருள்செய்த
பிரமன்மனை யாள்காக் கவே. (அ)



## காளி.

கண்டோட்டு மொழிகூறி யுயிரினுக் கருடந்த
கலைமதிக் கதிர்வி டும்பங்
கயமேய வாணிதனை நன்னாவில் வைத்துக்
களித்துமே லோங்கு நலமும்

பண்டோதி மப்பரி நடாத்துமய னன்மறை
படித்துமேற் பதவி பெற்ற
பான்மையும் புலிசையமர் பெரியதா யானபொற்
பாவைதன் கருணை யலவோ

வுண்டோ வவட்குநிகர் தெய்வங்க ளேழிரண்
டுலகமெல் லாந்தே டினு
முபசார வசனமல வுண்மையீ தாகுமவ்
வுத்தம குணச்செல் வியை

யெண்டோ ளசைத்தாடு மீசனுடன் வாதாடி
யியலான வல்ல பத்தா
லெங்குநிறை வுற்றகங் காளிமா காளியெனு
மென்றாய்ப்பு ரந்தருள் கவே. (கூ)

## சத்தமாதர்கள்.

கானமிக் குளவிலங் கைநகர்க் காவலன்
கைவந்த வல்ல பத்தாற்
கயிலையை யசைத்தலு நடுங்குறவி னானெனக்
கண்டுகி ழுறவ ழுத்தித்

தேனன்ன சாமகீ தம்பாட வருள்செய்த
தேவராம் பாட லேசர்
தேவியை மலைக்கரய னனவிம வானீன்ற
செல்வியைச் செல்வ மெல்லா

நானடைய வுதவியெங் கெங்குமெவ் வுயிரினு
நண்ணியுறை கின்ற தாயை
நற்புலிசை மாநகரு ளப்பருக் கருள்புரிய
நன்குவந் துற்ற கொடியைச்

சானகியை மணமேவி மானபர ருளமீது
தங்குபெரு மான்றுணை யெனுஞ்
சற்குண லயமான வெற்றிமீ றியஞான
சத்தமா தர்கள்காக் கவே. (கο)

## முப்பத்துமூவர்.

வேறு.

பத்தர்மே லருள்செயுஞ் சிவபெரு மானிடப்
பாகத்தைக் காணியாக் கொண்டபைந் தொடி
வித்தில்லா மன்முளைத் துத்திருப் புலிசையின் [யினை
மேவிய பெரியநா யகிதனைக் காக்கவே

சித்தமேன் மகிழ்வொடா தித்தர்பன் னிருவருஞ்
செஞ்சுடர்க் கண்ணுருத் திரர்பதி னொருவருஞ்
சித்தியார் பரிமருத் துவர்களோ ரிருவருஞ்
செப்புநா லிருவசுக் களுமெனுந் தேவரே. (கக)

காப்புப்பருவ முற்றிற்று.



இரண்டாவது

## செங்கீரைப் பருவம்.

பத்துமதி யுஞ்சுமந் தீனுமவர் போலாது
பயிறவத் தாற்பெற் றதாய்
பாலூட்டி நீராட்டி யீரம்பு லர்த்திமீ
புதமுற்ற கொண்டை யார்த்து

முத்தணிச் சுட்டிகமு மணிமாலை தோடழகு
முதிர்வலய முன்னு மணி
முழுமதிய வகிரன்ன நுதலுமரஞ் செவிபாணி
முதலவற் றிற்பூட் டியே

மெத்துமகிழ் வோடுசீ ராட்டும் பசுந்தோகை
மெல்லியல் விண்ண ளாவு
மின்றளிர் மாருதம் வீசுமரு தச்சோலை
மீதுவாழ் கிள்ளை யென்னத்

தித்திக்கு மழலைமொழி பேசியீ ரெண்கலைத்
திங்களன முகநி மிர்த்தித்
திருப்பா திரிப்புலி நகர்ச்செல்வி யுமைமாது
செங்கீரை யாடி யருளே. (க)

கண்மணியை யொத்திலகு மார்க்கமிரு மூன்றுளுங்
காத்தலின் மிக்க தெங்கள்
கருதரிய சத்திமார்க் கம்மென்ப பெரியரது
கண்கூட தாக நோக்கி

விண்மனு மதிக்கவே சமண்மதத் தார்கல்லில்
வீக்கியாழ் கடனடு விலே
வீழ்த்திப்போம் பொழுதெழுத் தைந்தாசு சொலவேலை
மீட்டவர்க் கருள்பு ரிந்தா

யுண்மையிது நீயசை யிலுலகமெல் லாமசைத
லுறுமெனக் காட்டலேபோ
லுற்றவிரு கைமலர் நிலத்தூன்றி முகமதியி
லொழுகொளியின் வெயர்வரும்பத்

திண்மையுற் றுளகொடியர் கன்மனமு முருகிடச்
சீரடியர் குறைகளகலத்
திருப்பா திரிப்புலி நகர்ச்செல்வி யுமைமாது
செங்கீரை யாடி யருளே. (உ)

தண்ணிலவு மதிகங்கை சர்ப்பமுத லானபொரு
டாங்குசடை முடியுமுலகந்
தவமுனஞ் செய்யவரு பயனன்ன முக்கணுஞ்
சார்ந்தமரர் காத்தருள் கென

வுண்ணிலவு கருணைகொடு சுந்தரனை நோக்கியிவ
ரோலமிட வுததி வந்தவ்
வுயர்பதவி முழுதும்ப ரந்துற்ற வாலத்தை
யோடிப் பிடித்து வாவென்

றண்ணரு மதன்வீறு நீங்கிடப் பற்றுவித்
தவர்வேண்டத் தாமு னுண்ண
வாயகரு மணியன்ன கண்டமும் முளங்க
ளண்ணலார் மகிழு மானே

திண்மைமன வடியவர்கள் கண்டுகளி கொள்ளநீ
திருவருண் மிகக்கொடுத்துத்
திருப்பா திரிப்புலி நகர்ச்செல்வி யுமைமாது
செங்கீரை யாடி யருளே, (௩)

செண்டோங்கு கரதலத் தையனையு மபனையுந்
· தீயபூ வாளி யேவிச்
செயற்கரிய தவமுனிவர் பலர்தமன நிலைகெடச்
செய்மதன் றனையு மீந்து

தண்டோங்கு சக்கரம் வாள்வில்லு வளைகளுட்
டலைமைவாய் பாஞ்ச சன்னியந்
தாங்கியுல கருள்புரியு மாயனுந் தேவருந்
தருநீழல் வாழ்வு பெற்ற

கண்டேங்கு மினியமொழி யயிராணி கேள்வனுங்
காக்கவென முன்னர் வேண்டக்
கடவுடந் திடவந்த வாறுமுக முள்ளமுரு
கனைமடியில் வைத்த வன்னை

தெண்டேங்கு வாரிதித் திரை முத்தை வேலையிற்
சேர்த்தபின் மீண்டு செல்லுந்
திருப்பா திரிப்புலி நகர்ச்செல்வி யுமைமாது
செங்கீரை யாடி யருளே. (௪)

இருவர்களி லொருவரைத் துணையாக்கி யவர்தம்மை
யினியவுயிர் காக்க வைத்தே
யிறையவரை யன்புசெறி நாதராக் கிக்காக்கு
மியல்பினுக் கெதிர தாக்கித்

தெருண்மலர்த் தாமரைப் பிரமனைச் செய்தவினை
தேர்ந்துபடை யெனநி றுத்தித்
தேவர்முத லெவரையும் பொருளாக்கி விளையாடல்
செயுமுனக் கரிய துண்டோ

வரியபொரு ணீயயற் கெளியைநீ யடியவர்க்
கறிபவர்க ளறிவு நீயே
யகிலவண் டத்துமுள வுயிர்கணீ யேயவையு
ளாய்நின்ற வுயுரு நீயே
திரையெனுங் கைகளா லப்பரைக் கரைசேர்த்த
சிந்தென்ன முரச மார்க்குந்
திருப்பா திரிப்புலி நகர்ச்செல்வி யுமைமாது
செங்கீரை யாடி யருளே. (ரு)

வேறு.

வண்ணமை வண்டுமெ கிழ்ந்துண் ணத்தேன்
வழிமலர் முகமாட
மாவுரு மாய்த்தவர் தம்மைய ணைத்த
மணியணி மார்பாட
வண்ணன் மதித்தம ரமர்க்குமு னீந்த
வமுதன மொழியாட
வணிகிளர் தருமே கலையொடு கலைபுனை
யார்மத் தியமாட
மண்ணிக ழடியார் கண்டுபு கழ்ந்துன்
மகிமையெ லாம்பாட
வாசவ னவையிடை யாடல்செய் மாதர்
மயல்கொண் டேயோட
வண்ணிய கெடிலப் புலிசையெ மன்னை
யாடுக செங்கீரை
அரானு ரிடமே வியகொடி யிடைநீ
யாடுக செங்கீரை. (சா)

வேறு.

காவிப் பூவன கண்டரி டத்துறை
காதலி செங்கோ செங்கீரை
கவினடி யிற்பா கதிகாட் டியநங்
கண்மணி செங்கோ செங்கீரை

பாவப் படரிருள் பாற்றிய தண்கதிர்ப்
பான்மதி செங்கோ செங்கீரை
பாடல நாயகர் தேடிய யாழின்
பண்மொழி செங்கோ செங்கீரை

கோவர்த் தனகிரி கொண்டவர் பின்வரு
கோதை செங்கோ செங்கீரை
குவலய மகிழ்தர வளியினெ டெழுசுடர்க்
கொழுந்தே செங்கோ செங்கீரை

யாவிக் காவிய தாயெனை யாண்டரு
ளம்மை செங்கோ செங்கீரை
யாதிப் புலிசையின் மேவித் திகழுமை
யாந்துணை செங்கோ செங்கீரை (எ)

வள்ளிம ணாளனை மார்பின ணைத்தருண்
மலைமகள் செங்கோ செங்கீரை
வரதக ணேசனை மடிமிசை வைத்தவொர்
மன்பொருள் செங்கோ செங்கீரை

தெள்ளிய மதியினர் தேடுமெ ரும்புகழ்த்
தேமொழி செங்கோ செங்கீரை
சிறியனை மதிநிறை பெரியவ னாக்கிய
சேயிழை செங்கோ செங்கீரை

கள்ளர்க ணெஞ்சினி லுள்ளவ ராதசெங்
கருவிழி செங்கோ செங்கீரை
கட்டமெ லாம்பொடி பட்டிடச் செய்தருங்
கௌரீ செங்கோ செங்கீரை

யள்ளற் கடலமி ழப்பரை யாண்ட ந
லன்னே செங்கோ செங்கீரை
யாதிப் புலிசையின் மேவித் திகழுமை
யாந்துணை செங்கோ செங்கீரை (அ)

பாலரை வேண்டிய சிலர்க் கருள்செய்
பாசிழை செங்கோ செங்கீரை
பத்தர்வி ரும்பிய முத்தியை யீயும்
பண்மொழி செங்கோ செங்கீரை

மாலொரு துணையென மா னுல கத்தொளிர்
மாங்குயில் செங்கோ செங்கீரை
மங்கள வடிவமி லங்கிய பைந்தொடி
மாதே செங்கோ செங்கீரை

வேலையில் விளைமணி மாலைநெஞ் சிற்புனை
மேலவள் செங்கோ செங்கீரை
விற்பனர் நற்கவி மாலையு மீந்திடு
மின்னிடை செங்கோ செங்கீரை

யாலமு கந்தவர் பாலில மர்ந்தெமை
யாள்பவள் செங்கோ செங்கீரை
யாதிப் புலிசையின் மேவித் திகழுமை
யாந்துணை செங்கோ செங்கீரை. (௯)

தண்டமிழேனைய வாமொழி யாகிய
தற்பரை செங்கோ செங்கீரை
தாவர சங்கம மாவளர் கின்றமென்
றளிரடி செங்கோ செங்கீரை

துண்டப் பிறையணி சோதியி டத்துறை
தோகை செங்கோ செங்கீரை
சோபன பங்கய மலரான முகமுள
தொன்னிதி செங்கோ செங்கீரை

யெண்டிசை மண்டுமி சைக்கருள் செய்திடு
மேந்திழை செங்கோ செங்கீரை
யிந்திரை முதலிய தெரிவையர்க் கெல்லா
மின்னுயர் செங்கோ செங்கீரை

யண்டமெ லாமசை யும்படி யாடிய
வரிவிழி செங்கோ செங்கீரை
யாதிப் புலிசையின் மேவித் திகழுமை
யாந்துணை செங்கோ செங்கீரை. (கo)

செங்கீரைப்பருவ முற்றிற்று.



மூன்றாவது.

## தாலப் பருவம்.



குருவாக் கியத்தைத் தாங்கேட்டுக்
கொடிய காமன் முதலாகக்
கூறு மறுவ ருறவகற்றிக்
கோதில் சமய ஞானியராம்

பெருமான் மியஞ்சே ருத்தமரைப்
பேணிப் பேணி யுறவடைந்து
பேசா நிலையிற் றனித்திருக்கும்
பெரியோ ரிதய கமலமதை

யொருபோழ் தினும்விட் டகலாத
வுயரோ திமமே மலையரய
னுளத்தி லுறைந்த கவலையெலா
மோட்ட வெழுந்த பெருந்திருவே

சருவோத் தமியே மகவருளத்
தாலத் துரித்தா கியபெருமைத்
தமிழார் புலிசை நகர்த்தேவ
தருவே தாலோ தாலேலோ (க)



தருப்பா சனத்தில் வீற்றிருந்தே
தனியாம் பதுமா சனமிட்டுத்
தபன னுதிக்குங் கீழ்த்திசையைத்
தானே நோக்கி வாசிதனை

யரைப்போழ் ததநுட் பத்துமிரண்
டறைநா டியிற்செல் லாதடக்கி
யரிதா கியநற் சுழிமுனையி
னதரி னெளிதா யுடனேற்றி

விரைப்போ தெனுமா யிரவிதழ்கள்
விரிபொன் னளினச் சோதிதனை
மிகவுந் தரிசிப் பவருளத்தின்
மேவிப் பிரியா வோதிமமே

சருப்பா பரணீ மகவருளத்
தாலத் துரித்தா கியபெருமைத்
தமிழார் புலிசை நகர்த்தேவ
தருவே தாலோ தாலேலோ. (௨-)



பருமக் களிற்றுப் பிடரேறிப்
பாவை யன்னார் விழிபாயப்
பவனி வருமிந் திரனுமவன்
பாரி தானு நகரொருவித்

தெருமந் தஞ்சு மனதினராய்ச்
சென்று பாரி லொழித்திடமுன்
செய்தன் னுரு னுயிரன்ன
சிறுவர் பற்றிக் கொடுஞ்சிறையாங்

கருமம் புரிந்த சூரனுரங்
கலங்கச் செவ்வேல் கொடுபிளந்த
கந்தக் கடவுண் மிகமகிழக்
கருதித் தாலாட் டியற்றியசீர்த்

தருமத் திறைவி மகவருளத்
தாலத் துரித்தா கியபெருமைத்
தமிழார் புலிசை நகர்த்தேவ
தருவே தாலோ தாலேலோ (௬)

கணமே யென்ன வொளிவீசு
கனமா மணிக ளிழைத்தவுருள்
காற்றே ரேறி யம்பிகைதன்
கணவ னுடனே வருகின்றான்

மணமேய் கூந்தன் மகளிரொடும்
வருக வருக வணங்கவென
வருவார் தமையு மழைத்தமரர்
வந்து போற்றி செய்யமணி

வணமா லையுந்தே னுண்வண்டு
மகிழ்மா லையுந் தூக் கியவீதி
மன்னு தவஞ்சே ரடியரெலாம்
வாழ்த்த வலமாச் செல்போதுத்

தணமார் கொடியே மகவருளத்
தாலத் துரித்தா கியபெருமைத்
தமிழார் புலிசை நகர்த்தேவ
தருவே தாலோ தாலேலோ. (௭)

ஓயா தடியார் தவம்புரிய
வொருநே ரமுமுட் சனியாம
லோடித் தேடி வந்துவந்தே
யுளத்தே நினைத்த வரங்களெலா

நீயா தரித்துக் கொடுக்குமதா
னினையே பெரிய நாயகியா
நிலத்தோ ரெல்லாம் புகழ்ந்திடுவார்
நீதிக் கதுவே மறையாவும்

வாயாற் றினமு மகிழ்ந்துரைக்கும்
வடிவேற் குகனை மடியில்வைத்து
மழலை மொழிகேட் டுவந்த நந்தா
மணியே யுலகி லெவ்வுயிர்க்குந்

தாயா னவளே மகவருளத்
தாலத் துரித்தா கியபெருமைத்
தமிழார் புலிசை நகர்த்தேவ
தருவே தாலோ தாலேலோ (ரு)

வேறு.

கரையின் மோதிப் பெருகிப் பாய்ந்தக்
கங்கா நதிமுதலாக்
கழறுந் தீர்த்திகை முழுதுஞ் சேருங்
கடலில் விளைபொருளும்

புரையொன் றின்றித் திரைநீர் பரவிப்
புலவர்கள் போற்றிசெயப்
பொலியுஞ் செந்நெல் வயல்வாய் மருதப்
புலமுறு திரவியமும்

வரையின் பொருளும் மதிதோய் தலையுறு
மாட நகர்ப்பொருளும்
மதமா வொடுபிற வுந்திரி யும்வன
மன்பொரு ளும்மிகலாற்

றரையினி லுயர்புலி சைப்பதி நாயகி
தாலோ தாலேலோ
சரண மடைந்தோர்க் கருடரு மன்னே
தலோ தாலேலோ (சு)

கூனற் பிறையுங் கொதிகொள் ளரவுங்
குளிர்கங் காநதியுங்
கோடும் பன்றிக் காடுங் கேசக்
கூரார் முத்தலேயுங்

கானற் றீயும் வெண்ணிற வென்புங்
கமலத் தன்சிரமுங்
கடினீள் கொன்றையு மத்தமு மாருங்
கமடத் தின்ளேடுங்

கானக் கொடுவரி யுரியும் வேகக்
கச்சார் பன்னகமுங்
காணக் காட்டிச் சபையிடை யேயொரு
கால்லவத் தாடுமான்

ருனற் றமர்புலி சைப்பதி நாயகி
தாலோ தாலேலோ
சரண மடைந்தோர்க் கருடரு மன்னே
தாலோ தாலேலோ. (எ)

பணிகட் கிறைதலை மீதிற் றங்கிய
பாரிற் ருமுன்னுட்
பண்ணிய புண்ணிய பாவத் தொழிலின்
பயனுய் வந்துற்ற

பிணிசுக மென்னு மிரண்டனு ளொன்றைப்
பெரிது மகிழ்ந்தொன்றைப்
பேணுதல் செய்யார் மிகநோ வடையும்
பேதையர் போலாதே

குணிகொளு மவைசம மெனநெஞ் சுன்னிய
கோதறு நிலைவாய்ந்த
கும்ப முனிக்கிணை யாகிய முனிவர்
குலாவி வசித்தநலந்

தணிவில பொற்புலி சைப்பதி நாயகி
தாலோ தாலேலோ
சரண மடைந்தோர்க் கருடரு மன்னே
தாலோ தாலேலோ. (அ)

நரையெரு தேறிப் பதுமன் றலையோர்
நகத்தாற் கொய்வித்து
நனியூ ழியிலுயிர் பதறக் கொலைபுரி
நக்கற் கவியீயே

றுரைமிகு வேதத் தவனைப் பொருளென்
றுளவாக் கியமாற்றி
யுயர்வா வின்னைச் செய்வே னெனமுன்
னேதின வன்யாகம்

புரைபட் டிடநற் றலைபோ யாட்டுப்
புன்றலை பெற்றிடுமா
புரிசடை யானுக் கிரனைத் தரவே
பொலிதுணை யைத்தந்த

தரையினர் மகிழ்புலி சைப்பதி நாயகி
தாலோ தாலேலோ
சரண மடைந்தோர்க் கருடரு மன்னே
தாலோ தாலேலோ (கூ)



துனேயெழ் பச்சைப் புரவித் தேரோன்
சூழ்வரு மாமதிலுந்
துயல்வரு வானந் துகிலுறு கொடிசேர்
சூளிகை வரிசைகளுஞ்

சுனேயே யாம்பல்கள் சிந்த மலர்த்துஞ்
சுடர்விடு வெண்மதியந்
தொடுமெழு நிலையமை கோபுர முந்திரு
துதிசெய் மண்டபமும்

புனேயோர் மணியென விண்மீன் பொலியும்
பொன்மேன் மாடமுடன்
புண்ணிய மளவில செய்து மகிழ்ந்திடு
புகழின ருந்தங்குந்

தனேயே நிகர்புலி சைப்பதி நாயகி
தாலோ தாலேலோ
சரண மடைந்தோர்க் கருடரு மன்னே
தாலோ தாலேலோ. (கo)

தாலப்பருவ முற்றிற்று.



நான்காவது

## சப்பாணிப்பருவம்.

இருதரா சுத்தட்டு மொன்றெனச் சொல்லுமா
றிலகப் புனைந்து பண்ணி
யிடையுங் கணக்கினிற் பிழையின்றி யேயங்
கியற்றியென் னுங்குறித் தே

பெருமைசேர் நாவுள்ள கோலதனி லேயுற்ற
பேணுமோர் தட்டின் மாற்றூற்
பிறங்குமுயர் தங்கமும் பொலியுமோர் தட்டின்முன்
பேசியந விடையு மேற்றி

யருமையாய் நிறைகண் டமைத்தகனை யாழியணி
யவிர்தரக் கவிமா லைபூ
ணன்னையே தென்னவன் முன்னே யுளுற்றிய
வருந்தவத் தின்கொ ழுந்தே

சருவலோ கேச்சுரீ தருணிவா கீச்சுரீ
சதுர்மறைப் புலிசை நகரிற்
றட்பாணி மலர்தா மரைப்போ திரண்டுகொடு
சப்பாணி கொட்டிய ருளே. (க)

கங்கணங் களுமணிக் கருவளை களுஞ்சேர்ந்து
கல்லென வொலிக்கு மோதை
காதிடைக் கேட்டுநின் றேழிமா ரருகிடைக்
களிப்புமிக் குச்சூ ழவு

மங்கள மிலங்குதா மரையின்வெண் மலரிலுறை
மகிமைசேர் கலைக டோர்ந்த
வாணிமா தாசீர் வதிக்கவும் பாற்கடலில்
வந்தமான் பொன்சொரி யவுந்

திங்கணிகர் வதனவிந் திரன்மனைவி முதலான
செல்வியர்கண் மலர்பொழி யவுஞ்
சிற்பரா சத்தியே கற்பெலா மோருருச்
சேர்ந்தசிற் றிடைவல் லியே

சங்கத்தை வென்றிட்ட களமுள்ள வன்னையே
சதுர்மறைப் புலிசை நகரிற்
றட்பாணி மலர்தா மரைப்போ திரண்டுகொடு
சப்பாணி கொட்டி யருளே. (உ)

சருவமுந் நானென்று மிதரமா கியவத்து
தானுநா னலதி லென்றுஞ்
சத்திய மசத்தியமு நானென்று மவைகளைச்
சாற்றுவோ ரென்னை யல்லா

லொருவர்களு மிலையென்று முதயமா கித்தோன்று
மொளியெலா முண்மை யாக
வொளிருவது மொளியின்றி மங்குவது நானென்று
முறைகளென் னுருவ மென்றுங்

கருமமும கருமமுந் நானென்று மக்கர்மங்
காட்டும் பலன்க ளெல்லாங்
கருதியிடி னானென்று மெங்கெங்கு மேவிக்
கலிக்கும் பராசத் தியே

தருமசம் வர்த்தனீ யோம்ப னன்னைநீ
சதுர்மறைப் புலிசை நகரிற்
றட்பாணி மலர்தா மரைப்போ திரண்டுகொடு
சப்பாணி கொட்டி யருளே. (ங.)

முனமொரு தினத்தினிற் கற்பகப் பைந்தாரு
முதல்வனை வணங்கு முப்பான்
முக்கோடி தேவரு மொருங்கு சேர்ந் தேவேத
முதல்வனின் ஞனெனத் தேர்

மனமுடைய ராய்ப்பிரம ஞெடுமாய னைக்கேட்க
மாயனு மேயெனுங் கால்
வந்ததொர் பயித்திய மதைத்தீர்த்த தலமான
வாதவூர் வந்து தித்த

தினகரன் மணிவாச கன்பொருட் டாகவே
தென்னதி வடக்கு நதியாய்ச்
செய்பாட லேசனைச் சேர்ந்தன்பர் துயரெலாந்
தீர்த்த கருணை கடாட்சி

சனகர்முத னல்வருக் கருடந்த சத்தியே
சதுர்மறைப் புலிசை நகரிற்
றட்பாணி மலர்தா மரைப்போ திரண்டுகொடு
சப்பாணி கொட்டி யருளே. (ச)

வாமிக்க வெண்டா மரைப்போதி னடுவினும்
மட்டிதழ் விரிந்த செந்தா
மரைப்போதி னடுவினும் வீற்றிருக் கின்றவரும்
வனநடுவில் வெட்ட வெளியி

விரவிதன் கொடியகதி ரோடுமெழை காற்றேற்
றியற்றிய பெருந்த வத்தா
லியலாக்கல் காத்தல்பெற் றதிமகிமை யும்பெற்
றிலங்குமவர் தமைவி ரும்பி

யுரியமண மாலைபூண் டுலகினிடை யுள்ளவ
ருனுற்றிய வினைக்குத் தக
வோர்ந்திரண் டானசெல் வங்களையு மீயுமிய
லோங்கலுற் றவரு மாய

சரசுவதி யிந்திரைகள் பணிமகிமை பெற்றநீ
சதுர்மறைப் புலிசை நகரிற்
றட்பாணி மலர்தா மரைப்போ திரண்டுகொடு
சப்பாணி கொட்டியருளே. (௫)



வேறு.

கங்கண மோடு கலந்திடு கருவளை
கல்லென் றொலிசெய்யக்
கவினுயர் மணிகள் குயிற்றிய தங்கக்
காப்புங் கதிர்வீசப்

பங்கய மலர்கள் சிவட்பொளி கண்டு
பயத்திடை யேமுழ்கப்
பகருஞ் சிறுவிரல் பத்துங் கூடிப்
பண்புட னேவிலக

வங்கிசை தருமரு தோன்றிச் செந்நிற
மதனுட னேகூடி
யத்தம னத்தினை யொத்தசி வப்பினை
யடியோ டேயோட்டக்

குங்கும கந்த வலங்கிருத சோபனி
கொட்டுக சப்பாணி
குலிசத் திறைபணி புலிசைப் பெரியவள்
கொட்டுக சப்பாணி (சா)



பாலோ பாகற் பழமோ வெல்லப்
பாகோ வெனவோதும்
பண்ணோர் தருமொழி கதிர்நீ ளயில்விழி
பற்றிய குறமாதின்

மேலே மாலுற் றேனற் புனமேன்
மேவிப் பலநாளவ்
வேடப் பெண்ணைச் சேரச் சூழ்ந்த
வேளா கியசுவைவாய்

பாலார் செந்தமிழ் மொழிவளர் மதுரைப்
பதிச்சங் கத்துற்ற
பண்டித ராசசி காமணி யன்பிலர்
பரவற் கெட்டாத

கோலா கலநற் சேயைத் தந்தவள்
கொட்டுக சப்பாணி
குலிசத் திறைபணி புலிசைப் பெரியவள்
கொட்டுக சப்பாணி. (எ)



கமைக்குப் புவியாய்ப் பவக்கா டொழிக்கக்
காமா தியைவென்று
காற்றுஞ் சருகும் முணவேயல்லாற்
கழறுமற் றுணவின்றி

யிமைப்பொழு தளவா யினுமே தம்மன
மெங்கணு மோடாம
லியமனை யுயிர்போக் கியபத மலர்மே
லின்புற வேசேர்த்தே

யுமைக்கொரு பாகனை நாடித் தவமே
யுளுற்றிய முனிவோருக்
குயர்துயர் செய்த மகிடா சுரனுயி
ரொருநொடி நேரத்தே

குமைத்தருற் கையா லிமைப்பொழு தளவுட்
கொட்டுக சப்பாணி
குலிசத் திறைபணி புலிசைப் பெரியவள்
கொட்டுக சப்பாணி. (அ)



செய்யாள் போற்றிட நீதினம் வாசஞ்
செய்யூ ராதலினுற்
சேர்ந்தா ரிருந்தார் சேர்வதி லெண்ணந்
தேர்ந்தா ரெல்லோர்க்கும்

பொய்யா வாழ்வும் பூர்ணு யுளுமிப்
போழ்தே யுதவிப்பின்
பொன்ரு மோக்கமு முதவுறு மிதுவெனப்
பொலிமுர செற்றுதல்போன்

மையார் விழியாய் மறைநூன் மொழியாய்
வாடா வொளிவாய்ந்த
மங்கா யிங்கா ருனையே நிகர்வார்
வண்டார் குழலாளே

கொய்யா மலரே குறையா மணமே
கொட்டுக சப்பாணி
குலிசத் திறைபணி புலிசைப் பெரியவள்
கொட்டுக சப்பாணி. (௯)



பணிவோ ரொழியா திரவும் பகலும்
பார்க்கும் பணியெல்லாம்
பரிவா யேற்றவர் வேண்டிய வற்றைப்
பாலிக் குந்தாயே

பிணியா வைகளும் படிமீ தடியார்
பின்னே தொடராமற்
பிரியமொ டருளெனு மவுடத மூதவும்
பெருங்கரு ணைக்கடலே

விணிலே மணிலே யுறைபவ ரடிதொழு
மென்னளி னப்போதின்
மின்னு ரிருவரு மகிழப் பொன்வளை
மின்னுங் கையாலே

குணபூ டணியே குலமா மணியே
கொட்டுக சப்பாணி
குலிசைத் திறைபணி புலிசைப் பெரியவள்
கொட்டுக சப்பாணி. (௧௦)

சப்பாணிப்பருவ முற்றிற்று.



ஐந்தாவது

## முத்தப்பருவம்.

கணமதெனினுங் கடவுடிருக்
கழலை மனதிற் கருதாது
கதிரோன் வழங்கு முலகினிடைக்
கயவர் மீது கவிபாடுந்

திணமி லொழுக்க முடையார்க்குச்
செய்யா தருளைச் சிவஞானஞ்
செப்பு மருணகிரிநாதர்
சிறக்கு மாசெய் குருவான

குணமுற் றிடு சீர்க் குகனை முனே
கொஞ்சி வளர்த்த பெருமைத்தாய்
குன்று மணிபோ லடியருளக்
கோயி லிருக்குங் கருணைத்தாய்

கணவர் தமக்கை வசமாக்கிக்
களிப்போய் முத்தந் தருகவே
கமலத் தடஞ்சூழ் புலிசைநகர்
காய்போய் முத்தந் தருகவே. (க)

சூதாட் டத்தாற் றுமேலுந்
துரங்க முழுது மணியுறுசிந்
தூரமுந் தேருங் காலாளுந்
தோற்றுந் தம்பி மார்கடமை

மேதா வியர்கள் வருந்திடவும்
வீர விறைவர் சோர்வுறவும்
விதியாற் றேற்று மண்டோற்றும்
விரிந்த வதனில் வாழ்குடிக்கு

மாதா வாம்பன் னியைத்தோற்று
மகிமை குலைந்த வறன்சேய்முன்
வந்து காத்த மாயனுடன்
வருஞ்சீர்ப் பெருமைச் சிமோட்டி

காதா லென்சொற் கேட்டுமுத்தங்
களிப்பாய்த் தந்தா ன் மகிழ்வுண்டே
கமலத் தடஞ்சூழ் புலிசைநகர்
காப்பாய் முத்தந் தருகவே (உ)

---

பண்ணே யனைய மொழிமடவார்
பாங்கி மார்தம் புடைசூழ்ந்து
பரவ வேகி மூழ்குமலே
பரவு நீரார் பெண்ணையினும்

தண்ணார் மலர்நீண் மரங்கள்பல
சாடிப் பெருகிக் கரைகடந்து
சலதி புகுந்தாங் குவர்மாற்றுந்
தகைமைக் கெடில நதியினிலு

மண்ணோர் கொள்ளும் படிவிளைந்து
வருமுத் தமுநின் கனியைநிகர்
வாயின் முத்தந் தனக்கிணையோ
வளரு மொளிசேர் மெய்ஞ்ஞானக்

கண்ணே யிமவான் பெற்றெடுத்த
கருப்பே முத்தந் தருகவே
கமலத் தடஞ்சூழ் புலிசைநகர்
காப்போய் முத்தந் தருகவே. (௩)



மானூர் களங்க மாமதியு
மண்ணி லிருளைத் துரக்குமொளி
வாவும் பச்சைப் புரவியுறு
மணிசே ரொற்றைச் சிற்றேரு

மானு மலர்ந்த வெண்மரைத்தே
னலரோ ரிரண்டுங் கொண்டகன
லருணன் றானு முதயஞ்செ
யலைக்கைக் கரிய வார்கலியி

னானீ ணிலமேல் வாசஞ்செய்
நரர்க ளெடுத்த வாணிமுத்து
நாடி லுனது திருமுகத்து
நலநீண் முத்த நிகராமோ

கானு மிருதக் கருங்குயிலே
கனிவாய் முத்தந் தருகவே
கமலத் தடஞ்சூழ் புலிசைநகர்
காப்போய் முத்தந் தருகவே. (௪)



எல்லோ னனைய மாணிக்க
மிழைத்த முடியேற் றிவ்வுலக
மெல்லா மாளு மவர்வாழ்வு
மெய்வாழ் வினிற்கீ ழெனுமுழவர்

பல்லேர் பூட்டிக் கோல்காட்டிப்
பழன முழுது விளைதக்கவளர்
பசிய சாலிப் பயிர்களினிற்
படுமுத் தமுஞ்சீர்க் கரும்புமுத்து

மல்லார் கரிமா முகன்றாய்நின்
வாயார் முத்தந் தனக்கிணையோ
வலிய ரெளியர் தமைவருத்த
வந்து காக்கு மலைபுதல்வீ

கல்லா ரிதயத் தில்லாதோய்
கனிந்தோர் முத்தந் தருகவே
கமலத் தடஞ்சூழ் புலிசைநகர்
காப்போய் முத்தந் தருகவே. (௫)



வேறு.

கடலினிடை யேறியே பலநாடு சென்றெல்லை
காணாத பொருடேடி யிற்
கருதிவரு கின்றகொழு நன்றன்னை வீதியிற்
கண்டவர்க ளோடி மொழிய

மடமுதல வாயகுண முளமாது வாயிலில்
வந்துகண் டகமகிழ் தல்போல்
வானோங்கு நறியமண மலர்மிக்க சோலையில்
வாழ்கின்ற தோகை மஞ்ஞை

நெடியகட னீருண்டு மின்னுமுகில் கண்டுமகிழ்
நிறைவள முனைப்பா டியி
னித்யகல் யாணியளி வேணிசுக பாணியின்
நிலத்தோர்கள் பணியி ராணி

திடமுயர்ந் துறுதிருப் பாதிரிப் புலிநலூர்த்
தேவிமுத் தந்தரு கவே
தேவரிரு வர்க்கரிய பாடலே சர்க்குரிய
செல்விமுத் தந்தரு கவே. (௬)

மீனினங் களைவாரி வாரியகல் வாயால்
விழுங்குமக ரங்கள் கோடி
விளையாடி வதிதலான் மகரா லயம்மென
மேவுமே ழுததி யான

மானமுயர் புடைவைதன் னிடையினிற் சூழ்ந்திலகு
மகிமைகுடி கொண்ட வவனி
மாதின்முக மாந்திருப் பாதிரிப் புலிநலூர்
வந்தடியர் கலிய கற்றி

கானில மதித்திடப் புவிவாழ்வெ லாமுதவி
நற்கருணை விழியி னாலே
ஞானமுத வித்திரும் பாதபத வியுமுதவி
நன்குகாத் தருளு தாரி

தீனசன பரிபாலி வானவர்கள் பணிசிவி
தேவிமுத் தந்தரு கவே
தேவரிரு வர்க்கரிய பாடலே சர்க்குரிய
செல்விமுத் தந்தரு கவே. (எ)

கோதிலா தொளிர்பொனைப் பித்தளை நிகர்க்குமோ
குணமுடைய குலமா தரைக்
குணமென்னு மணியற்ற மாதர்நிக ராவரோ
கொக்கனந் தனையொக் குமோ

சீதநீர்த் தாமரையை வேறுமல ரொக்குமோ
செய்யவே லன்செ லுத்தும்
செழியபைந் தோகையை விரித்தாடு மயிலினைச்
சிலபறவை நிகரா குமோ

வோதுவே தங்களுக் கெட்டாத மாமகிமை
யோங்கும் பராசத் திநீ
யுனையிதர தெய்வங்க ளொக்குமோ வுளமகிழ்ந்
தோடிவந் தெமைய ளிக்குந்

தீதுசே ராத்திருப் பாதிரிப் புலிநலூர்த்
தேவிமுத் தந்தரு கவே
தேவரிரு வர்க்கரிய பாடலே சர்க்குரிய
செல்விமுத் தந்தரு கவே. (அ)

தோன்றிடிற் புகழோடு தோன்றுக விலாவிடிற்
றோன்றாமை நன்றென் னவே
துங்கவள் ளுவநாய னார்வாக்கி னுன்முனஞ்
சொற்றகுற ளுக்கி ணங்க

வான்றவிசை யாளர்க ளியற்றுதரு மங்களு
மனேகமத் தரும முருவேற்
றவதரித் தாலொக்கு மென்னுமா றுள்ளா
ரனேகரு நிறைந்து றுதலாஸ்

வான்புகழ் தரும்புலிசை யாநகர முய்யவே
வந்தவத ரித்த தாயே
மலையரசன் மனைமேனை பாராட்டி யன்பால்
வளர்த்துமகிழ் வுற்ற கிளியே

தேன்றுளித் திடுமலர்ப் பாதிரிப் புலிநலூர்த்
தேவிமுத் தந்தரு கவே
தேவரிரு வர்க்கரிய பாடலே சர்க்குரிய
செல்விமுத் தந்தரு கவே. (௯)

சகலவுல கத்தினரு முய்யவழி காட்டுநற்
சதுர்மறையு நீயவ ற்றின்
றனிஞான சாரமென் றுரைசெய்யு நூலுநீ
சாத்திரப் பொருளு நீயே

தகைமைப் புராணமு வாறுநீ யவையுளே
சார்ந்தமெய்ப் பொருளு நீயே
சாற்றுமிதி காசமு மதன்பொருளு நீயவனி
தனிலெங் கணும்வி ளங்கு

மகிமைபெரு கியபாடை யாவுநீ யாகையான்
மற்றுமொரு வத்துள் ளவோ
மணமருவு பாடலே சர்க்குமுன் னலன்றி
மகிமையும் புகழு முண்டோ

செகிதிக ழுந்திருப் பாதிரிப் புலிநலூர்த்
தேவிமுத் தந்தரு கவே
தேவரிரு வர்க்கரிய பாடலே சர்க்குரிய
செல்விமுத் தந்தரு கவே. (௰)

முத்தப்பருவ முற்றிற்று.



ஆறாவது.

## வாரானைப் பருவம்.

மட்டில் லாத தவம்புரிந்த
மலையத் துவசன் குடிவளர
மதுரா புரியில் வந்தவன்றன்
மடிமீ தேறி மனத்தார்ந்த

கட்டம் யாவும் பொடியாக்கிக்
கருணை யாலிவ் விகவாழ்விற்
கணக்கில் லாத சுகமுதவிக்
களிப்பாங் கடலின் மூழ்குவித்துப்

பட்டத் துடன்மா முடிதாங்கிப்
பணிய வெவருங் காத்துலகு
பரனை மணந்து மணிமுடியும்
பாரு மளித்த கற்பகமே

சிட்டர்க் கெளிதாய்த் தோன்றிடுநற்
செம்பூ வடியாய் வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (க)

மறிமான் கரத்துப் பெருமானை
மகிழ்ந ளுகக் கொண்டுமலை
வையமுதலா முலகத்து
வாழு முயிர்க்குத் தாயாயு

மிறையா மலையோன் மேனையுட
னின்ப மடையப் பரைமகவா
யேகி வளர்ந்த நின்றிறத்தை
யெண்ணி யாராய்ந் திடினெவர்க்குங்

குறையாக் கருணை யாலெங்குங்
குலவுஞ் சீவர் தமக்கருளைக்
கொடுக்க வேண்டிப் பலவடிவுங்
கொண்டா யென்கை புலப்படுமைச்

சிறையார் சோலைக் குயிலிசைபோற்
சீர்கொண் மொழியாய் வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (௨)



கவித்தே ரருண கிரிநாதர்
கணக்கில் லாமற் றொடுத்தசந்தக்
கவிமா லைகளு மாரலவர்
காதன் மிகவுற் றுதரவாய்க்

குவித்தே தொடுத்த நவமணியின்
கோவை களும்பூ ணுறிருவா
குவினு மேனை யோர்சாத்துங்
குளிர்மா லைகளு மகிழ்ந்தேற்றுந்

தவத்தோர் தம்மு ளுயர்ந்தபரா
சரன்றன் புதல்வர்க் கிட்டகொடுஞ்
சாப மொழித்தும் விளங்குகுகற்
றந்து புலவர் சிறைநீக்கித்

தெவிட்டா வமுதா யிறைவனிடஞ்
செறியுங் கிளியே வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (௩)

வேதம் பகர்ந்த படியசுவ
மேத மாதி வேள்விபல
வேண்டி விதித்து மான்முதல
விண்ணோ ரடியைப் பூசித்தும்

பூதஞ் செறிகா டடைந்துதகம்
புயலா தபமக் கினியுடலிற்
பொருந்தச் சகித்திட் டுதிர்சருகு
புசித்துக் கடிய நோன்பியன்று

மோதம் பொலியுங் கடலினுமற்
றுயர்கங் கையினு முறைபடிந்து
முறுதற் கரிய பரமபத
மொருகால் வணங்கி னுதவுமணி

சீதந் தணிப்பண் டளித்ததசத்
திருவங் குலியாய் வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (௪)

பவமார் பகைவர் புறங்காணப்
பார்த்தன் பொருவான் கீதையுளம்
பதிய வுரைத்த கண்ணபிரான்
பலநாள் வழிபட் டிடத்தோன்றி

நவமார் வரங்கள் பலவுடனே
நம்ப னருளி மகப்பேறு
நல்கி யருள்செய் தருபோல
நமக்கு மருளுந் தாய்வருக

தவமா ரடிய ரிடத்தினன்றித்
தங்கா வேக மயில்வருக
சரணம் புகுவோர் தமைக்காக்குந்
தருமக் கொடியே வருகமிளிர்

சிவமார் ஞானந் தந்தருளுஞ்
செய்ய குணத்தாய் வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (ரு)

உய்வைக் கருதி வணங்குமவர்க்
கோங்கு கருணை யென்னுமத
முதவிப் பரம ஞானியர்த
முள்ளக் கூடம் பிரிவறியாச்

சைவத் தலைமைக் களிற்றினொடு
தழுவி யமரர் பொருட்டாகத்
தண்மை நிலவு பிறைக்கோட்டுத்
தந்தி யீன்ற பிடிவருக

நொய்வைத் தெரிக்கு மிடைக்கொடிச்சி
நுதிவேற் கட்குஞ் சரியுடனே
நுவன்று மாமி யெனவணங்க
நோக்கி யருளு மான்வருக

தெய்வக் குழாங்க டினம்புரியுஞ்
சேவை பெறுவோய் வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (சு)

அன்னம் பிரமித் திடநடந்தே
யன்ன மறியா தாலமுண்டு
மாவி தரித்த பெருமான்பே
ரன்பு முழுதுங் கவர்ந்துசுடர்ப்

பொன்னம் பலத்து நடனஞ்செய்
போது மற்றைப் பொருள்களினைப்
பொருந்தக் கண்ணு னோக்காது
பொலிநின் வதன நோக்கச்செய்

தின்ன மவனை மயங்குறச்செய்
திடுநின் பெருமை சொலப்போமோ
வெந்நா ளுந்தொண் டினைச்செய்தே
யேத்து வோருக் கருள்புரியுந்

தென்னன் மகளே யீன்றளிக்குந்
தேவர்க் கிறைவீ வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (எ)

களிவாய்த் திருமா றடியருக்குக்
காட்டி யருளை யினிப்பிறவாக்
கதியு மீயு மேரம்பன்
களித்து வணங்குந் தாய்வருக

களிநீண் மதுவை வேண்டியரி
நாடிச் செறிந்து வரிபாட
நயந்து தருமென் மலர்க்கூந்த
னங்கை மகிழ்ந்து நீவருக

வெளியோ னுலோ மழையிலெழு
மின்னற் கொடியோ வெனப்புகல
மெலிந்து கா ணு நுசுப்பதுள
மின்பொற் பாவை நீவருக

தெளியார்க் கரியோ யருள்பழுத்த
தெய்வக் கொடியே வருகவே
செய்சூழ்ந் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (அ)

கங்கா நதியின் மதஞ்சொரியுங்
களிற்றின் கோட்டிற் சுவைக்கரும்பிற்
கமுகிற் பிறவற் றிற்பிறந்த
காந்தித் தரள மாலைகளு

மங்கா நீல மணிகோத்த
மணிமா லையுமொண் பவளமய
மலிமா லைகளு நிரைத்தணிந்து
வயங்கு களத்தி நீவருக

விங்கோ வுங்கோ வங்கோவென்
றெண்ணு தேத்தும் படியெதிரி
லேகி யடியார்க் கருள்புரியு
மிறைவற் கேற்ற மனைவருக

செங்கா லன்னப் பெடைபோலத்
திகழு மரசி வருகவே
செய்சூழ் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (க)



தருவே வருக தருவினிறை
தழையே வருக தழையுமிளந்
தளிரே வருக மலர்ப்பாரந்
தாங்க லாற்றாப் பொற்கொம்ப

ருருவே வருக வுருசிநிறைந்
தோங்குங் கொம்பிற் பழுத்துமது
வொழுகுங் கனியே வருகவிளந்
தூறுஞ் சுவையே நீவருக

மருவோ டிசைந்த மலர்வருக
மலரு முல்லை முகைவருக
மகிழ்ச்சி யோடு மாதர்பலர்
வணங்கிச் சூழு மதிவருக

திருவோங் கிடுமா றுலகினர்க்குச்
செய்யு மிறைவி வருகவே
செய்சூழ் திலகு புலிசைநகர்த்
தேவீ வருக வருகவே. (கo)

வாரானைப்பருவ முற்றிற்று.



ஏழாவது

## அம்புலிப்பருவம்

மண்ணுளா ரும்விண் ணுளார்களும் வாழ்த்தமா
மாதைமார் பிற்ற ரித்து
மரகதக் கிரியென விளங்குதன் முன்னைகண்
வளர்கின்ற கடலில் வந்த

வுண்மையா லோவிறைவர் கண்ணு யமைந்திட்ட
வுயர்வினு லோவெ ணுளி
லொளிமிக்க நெற்றிக்கு நிகராகி நீயிலகு
முரிமையா லோமற் றுநல்

வெண்ணிலா வீசுதன் வதனமுநின் வடிவமும்
வேற்றுமை யிலாமை யாலோ
வேதமுத லாயகலை களுமறிதற் கரியவள்
வேண்டி நினையே யழைத்தா

ளண்ணலார் நெஞ்சிற் புகுந்துநீங் காக்கொடியொ
டம்புலீ யாட வாவே
யரம்பை களடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (க)

பசுபதியை யன்புடன் மேவியின் புறுவளப்
படியின்ப முறுவை நீயும்
பணிகண்ட மென்றுமிவ ளேற்றெளிர்வ ணியுமோ
பணிகண்ட மேற்று மிளிர்வா

யசத்தினுக் கினியதன் னருடருவ ணீயுநீ
ரசத்தினுக் கருட ருகுவா
யண்டத்தர் மெத்தமன மகிழவந் தாணீயு
மண்டத்தர் மகிழ வந்தா

யிசைக்கணிய ளாகல்ல விவடன்னை நீநிகர்த்
திலகலான் மிகவி ரும்பி
யேயழைக் கின்றனள் ளிதுபெரும் பயனென்ன
வெண்ணிமு வர்களு மோரா

வசித்தினுஞ் சித்தினு நிறைந்த வரிடத்தளோ
டம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (ரு)



நிலையின்றித் தேய்குவாய் பின்புமுறை வளர்குவாய்
நேடுவார்க் கிந்த மாதா
நித்தமு மொரே தன்மை யாய்த்தோன்று வாணிற்க
நீபத்து மாறு முற்ற

கலைகுன்ற லின்றிநில வெந்நாளும் வீசிடுதல்
காணினும திந்த வண்டங்
கடக்குமோ விவணிலாப் பல்கோடி யென்றறிஞர்
கருதுமண் டத்தி லெல்லா

முலைவின்றி நிலைபெற்ற துணையிவ ளழைத்திடவு
மோடிவரு கின்றி லாயென்
னுனக்குமதி யெனுநாம மொவ்வா தெனப்பலரு
முரைசெய்யு முன்ன னம்வா

மூலமிக்க புனறந்த முத்தநிகர் பல்லினளொ
டம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ர்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (௩)

சூரியற் காணினின் ஞெளிமங்கு மவனெங்க
டோகையிவ ளேக்கா ணுமேற்
சுடர்மங்கி டும்பிதா மதலைசொல் சாபமொழி
தொடாநீ யுயிர்து டித்தாய்

போரியற் சுதனெனும் வீரனு லிவளவன்
புரந்துடிக் கக்கண் டனள்
பொன்னணி மிகுந்தகுரு மனையினுற் றுன்பம்
பொருக்கினு யிவடொ டர்ந்து

நேரியற் பெரியருக் கருளுமிறை யாலின்ப
நிகழ்தரப் பெற்று வாழ்வா
ணீயிவைக ளேச்சிறுது நினையாமை யைக்கண்டு
நினைக்கையா லும்ம ழைத்தா

ளாரியற் றெய்வகுஞ் சரியைமகிழ் மாமியினெ
டம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (ச)

மங்கண னெனுந்தவற் கானமுய லுருவத்தை
மாற்றியதித் தலமீ தினை
மாமுனிவ ரறிவர்பல மானுடரு மறிவருயர்
வானுளோர் களுமறி வார

லிங்குவந் துறுவையேன் முயற்களங் கம்பெயர்ந்
தேகிடப் பெறுதி கமல
மெய்துநின் னைக்கண்டு கூம்பிடா தும்பிரிந்
திருக்குநா யகர்மங் கைய

ரங்கமுழு தையுமதிய மெனுமனலி சுடுகின்ற
தையகோ வென்னு மஞு
மருளுதற் குரியநல் லருளுமிவ் வம்மைபா
லடைகுவா யைய மில்லை

யங்கருணை யாலுலகு காக்கும்பெரு மாட்டியுட
னம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (ரு)



புத்தியில் லாதார லையுமவள் பின்வந்த
பூவையையு மிகவு வந்து
புணர்ந்துமற் றவர்தமைவெ றுத்ததா னீபெற்ற
புன்மையுட னேபுன் மைதான்

மெத்தியிட வேண்டுமென் றுன்னினைகொ லிவளுனை
விளிக்கவும் வருகின் றிலாய்
விரைந்தவந் தாலுய்தி மின்னன்ன விடையினாள்
வெகுளிகொண் டிடுவ ளாயின்

முத்தலத் தினிலெவ் விடத்தினுந் தீர்த்தற்கு
முன்வரத் தக்கா ரிலை
மூவர்கள் விலக்கவும் முடியாது தெண்மதியின்
முன்னியசு ரரைவ தைத்த

வத்திமுக னையுமா று முகனையும் பெற்றவளொ
டம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (சு)

மானேந்தி வருகையா லீசனென் றேநினைவு
வைத்துநீ யுமையம் மையை
மதியாது செல்கிறு யுனதுதுன் மதியினுல்
வருவதைப் பின்னோர் கிலாய்

நானீச னென்றெண் ணு மவ்வீச னுனைநாடி
நாடியிப் போழ்த ழைத்த
நற்பரா சத்திமண நாதனு கிச்சாணி
னளிராத்தி யுங்கொள்: ளையும்

வானுறு நிறைசென்னி படவூட னீக்குமா
வாழ்த்திப்போற் றுங்க ழுக்கை
வரன்செய்கை யிதுநின்னை யிவள்சீறி னுய்வில்லை
வருதியே லுய்தி வெள்ளை

யானேறி வந்துவந் தடியரை யளிப்பவளொ
டம்புலீ யாட வாவே
யரம்பைக ளடர்ந்தெழு நெடும்புலிசை யம்பிகையொ
டம்புலீ யாட வாவே. (எ)



வேறு.

பயிடன் சேடன் மிசைத்துயிலும்
பஞ்சா யுதனு மலரயனும்
பரந்த வுயிரு மண்டங்கள்
பலவும் பட்ட விடமாநீள்

சுடலை நடிப்போன் றனுதுகளஞ்
சுடர நீல மணிகொடுத்துஞ்
சுவர்க்க மென்னும் பொன்னுலகந்
துலங்கப் பதும நிதிமுதலா

மிடர்க ணீக்கும் பொருள்கொடுத்து
மிலகுந் திருப்பாற் கடலான
வீடில் லாத பெருமனையை
யிழந்தா யருளில் லாமையினல்

வடுவில் லாதா ளருளடைந்தான்
மனைநீ பெறுவாய் வளப்புலிசை
வளர்தா யுடனே விளையாட
வருக வருக வம்புலியே. (அ)

அட்ட மூர்த்த முஞ்சிவனுக்
கான வுருவ மென்றுரைசெய்
தவனின் முகத்தி லிலகுமழ
கார்ந்த விழியுஞ் சுடரென்பர்

சிட்டர் புகழச் சிறப்பினைநீ
சேர்ந்தா யெனினுஞ் சூரியனிற்
றிகழ்கின் றுயோ மேன்மையினற்
றேவி முன்பு வருகுவையே

விட்டப் படியே வேண்டுமெவர்க்
கெல்லா முதவு மெனற்கேற்ப
விறையின் வலது கண்ணுக்கி
யிரவி வணங்கஞ் செய்திடுவான்

மட்டின் மகிமைக் கெடிலநதி
மண்டி வருநல் வளப்புலிசை
வளர்தா யுடனே விளையாட
வருக வருக வம்புலியே. (கூ)



அல்லை யோட்டு மொளிகொள்பதி
ஞறு கலையு மின்றுநிறைந்
தண்டத் தலையு நீயிவள்பா
லடையிற் புழைக்கை மாவதனக்

கல்லை நிகர்த்த மனவசுரற்
கடிந்தோன் புகழுங் கடவுளர்கள்
கடம்பு முதலா மலர் தூவிக்
காத்தி யெம்மை யெனவணங்கச்

சொல்லைப் பழித்த வேலேவிச்
சூர னூரமு மவனிளைய
தோன்ற னூரமுங் கிரியகமுந்
துளைத்தோன் புகழுங் கேட்டிடலா

மல்லைப் பயின்ற புயவீரர்
வாழு மாட மலிபுலிசை
வளர்தா யுடனே விளையாட
வருக வருக வம்புலியே. (கம)

அம்புலிப்பருவ முற்றிற்று.



எட்டாவது

## அம்மானைப் பருவம்.

புள்ளியரி தேனுண்டு கீதஞ்செய் மலர்மேவு
பூவையர் வியப்பெய் தவும்
போதற்கு மெட்டாத சிகரமுள செஞ்சோதி
பொலிவெய்தி மிகநோக் கவுந்

தெள்ளிய விருக்குமுதல் வேதமுட னாகமத்
திரளுமற் றுங்கலை களுந்
தேவிபுரி விளையாடல் காணயா முன்னரே
செய்ததவ மென்னென் னவும்

வெள்ளைநிற வச்சிரங் கமலரா கந்துய்ய
மேதகம் பச்சை முதலா
மிளிர்கின்ற மணிகளாற் செய்தவம் மனையெலா
மேலேக வீசி வீசி

யள்ளிலை நடுக்கமல மலர்புலிசை நாயகி
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் றுந்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (க)

விரும்பிச்சு மந்தீன்று பாலமுத மூட்டிமென்
மேனிவா டாது போற்றி
வேறுமுத விகள்செய்த மாதாவின் மனநைய
வெய்யமொழி யைக்கூ றுவோர்

கரும்பன்ன மொழிமாதர் கலவியைக் கனவினுங்
கருதாத துறவு நிலைமை
கண்டவரில் யாமுயர்வு கொண்டவரென் றுரைவிண்டு
களவிலவர் தம்மை யணைவோ

ரிரும்பன்ன நெஞ்சரா யுயிரைவதை செய்குவோ
ரேழைகளை நிந்தை செய்வோ
ரென்னுமிவ ரும்வந்து மூழ்கிடப் பழிநீக்கி
யின்பவழி காட்டு பெண்ணை

யரும்பல்மணி கரைவீசு புலிசைநகர் நாயகி
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் றுத்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (உ)



கொடியன்ன விடையுள்ள வயன்மாதர் சிறுமகளிர்
குளிர்மிக்க கமல மலருங்
கொண்டல்வண் ணன்கையி லமர்சங்க மதைவென்ற
கோடுஞ்சா லியுமிப் பியுங்

கடியுற்ற பிறவுமீன் றிட்டமுத் தங்களைக்
கைக்கொண்டு சிற்றி லாற்றிக்
கதிர்வீச முகமுத்தும் விளையாட லுஞ்செயக்
கண்டுமெள் ளச்சிறுவ ரோர்

நொடிகொண்ட போழ்தினுட் காலா லழித்தவர்க
ணேக்கமுத் தமுநோக் கியே
நூழில்படு செங்களத் திற்கெதிர தாயறிவர்
நுவலுங் களத்து லாவு

மடிகொண்ட நீர்ப்பண்ணை யமைபுலிசை நாயகி
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் ருத்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (௩)

பணையகில் சந்தாந்தி மணிவாரி வானளவு
பலவினின் கனிபு ருட்டிப்
பண்ணவரும் வாழ்த்திடப் பரவிவரு கெடிலநதி
பண்மொழியு மன்ன நடையு

மிணைதனுப் புதலுமுத் தப்பல்லு மியைமாத
ரொய்திவிதி வழுவ லின்றி
யேற்றவுயி ரன்னநா யகர்காம் பற்றிமகிழ்
வேறமூழ் குதனோக் கியே

துணைவனிட மதைநேடி யோடிநெஞ் சின்மதனத்
துன்பமிக நேர்ந்தி டாமற்
சுடர்மணியு நால்வளையு மலைவீசு மக்கடற்
சுகமார் பணிந்து வாழ

மணைகொண்ட கெடிலத் துறைப்புலிசை நாயகி
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் ருத்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (௪)

கங்கைகொல் பதினறு கலையுநிறை திங்கள்கொல்
கண்ணனூர் தயிலு மலைகொல்
கடவுளமர் கயிலைகொல் லென்றைய முறநீறு
காயமிளிர் தொண்ட ரெல்லா

மங்கமுலை வெய்தமன மாசுண்ண வுண்மைநிலை
யறியாத கொடிய வமண
ராற்றுவித் திட்டதீங் கவைமுழுது நீங்கவா
னடிபெற்ற வாசு முதலோர்

தங்கரந் தலைகுவித் துச்செய்த பாச்சொலத்
தகைமைதெரி கிள்ளை கேட்டுச்
சார்ந்துபொன் னூட்டிற்கி ளிக்குத்தெ ரித்தவண்
டங்காது வந்து வாழு

மங்கொண்டல் படிசோலை யவிர்புலிசை நாயகி
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் றுத்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (ரு)



இரும்பன்ன காலுழவ ரோர்நுகத் தில்வலிய
வெருமைக் கடாவொ டெருதை
யிணைத்துழுது விதையிட்டு நீர்பாய்ச்சிச் சேறுசெய்
திளநாற்றை யாங்கு நாட்டி

விரும்புமக வுக்குமிகு பிணிநீக்கு மன்னை போன்
மேயகளை கட்டெ டுத்து
விலங்குமுத லாயவற் றுற்றீமை யெள்ளளவு
மேவிடா வகைபோற் றிடக்

கரும்பென்ன வவையோங்கி யீன்றகதிர் விளைவினைக்
கடவுளரு மாந்தர் தாமுங்
காசினியின் மற்றுமுயிர் களுமுண்டு மகிழ்வுறக்
காணுநற் கழனி யுடனே

யரும்புமலர் வாவிசூழ் தென்புலிசை நாயகீ
யம்மானை யாடி யருளே
யரியுமறி வரியதோன் ஞூத்துணைவர் பாகத்த
ளம்மானை யாடி யருளே. (௬)

வேறு.

தொண்டினர் வேண்டுவ தீயும் பரமன்
றெல்லருள் கைகூடத்
தொனியலை கரைமிசை யெறிபாற் கடலைத்
துய்த்தழு கைதீர்ந்து

மெண்டிசை வளரிசைப் பஞ்சவர் தூதற்
கின்போ தனைசெய்து
மேழுல கும்முப மன்னியு வென்பெய
ரேற்றிய முனிவற்கு

மண்டிட நிசொல் லியசா பத்தால்
வந்ததொர் முயலுருவை
மாற்றிய பாதிரி மரமலர் வாசம்
வானுல கிலுமேகு

மண்டிய வண்மைப் புலிசைச் சுடரே
யாடுக வம்மனையே
யணிகிளர் செந்தா மரைமல ரார்கொடி
யாடுக வம்மனையே. (எ)

கறைமிடற் றிறையையு நின்னையு மறையோர்
கருதித் துதிசெய்யுங்
கதியோத் தொலியுஞ் சைவர்கள் போற்றிக்
கழறுந் தேவார

முறையொலி யும்பல வடியவ ருஞ்சிவ
முன்னவ சுடராய
முக்கண வெனவுஞ் சிவைபரை யெனவு
மொழிந்திடு மின்னெலியுந்

துறையமை நீர்விளை சங்கத் தொலியுந்
தோலுறு முரசுமுதற்
சொலுநல் வாத்திய வொஃலியுங் கடலொலி
சோரமி கும்புலிசை

யறைமணி நூபுர வடியுள வனமே
யாடுக வம்மனையே
யணிகிளர் செந்தா மரைமல ரார்கொடி
யாடுக வம்மனையே. (அ)

முத்தி லிழைத்தவுஞ் செம்பவ ளத்தின்
முயன்று புரிந்தனவு
முழுநீ லத்தில் விதித்தவு மாகிய
முதிர்மணி யம்மனைகள்

பத்தி மிகுந்தவ ருக்கருள் செய்புமுன்
பல்லொளி யும்மதாம்
படுமொளி யுந்திரு மேனியி னின்று
பராவொளி யும்முறையே

பொத்தின தந்நிறத் தினையென வெட்கிப்
போகின் றனவென்னப்
பொலிசுடர் திரிதரு வான்புயன் மண்டலப்
புனலைச் சொரியுங்கோட்

டத்திசெல் வீதிப் புலிசைப் பதியவ
ளாடுக வம்மனையே
யணிகிளர் செந்த மரைமல ரார்கொடி
யாடுக வம்மனையே. (௯)

தேர்ந்தவி சாரதர் பத்திக் கணையாச்
செப்பிய நற்பிரம
சீலனு வந்துப டிந்திட வுலகரு
டேவனு முணரவொணுக்

கூர்ந்தபு கழ்ப்பெரு மான்கழ லடியிற்
கூட்டிய முற்கடவுள்
குலையவ லைத்தப வத்தையு மெவருங்
கொண்டா டித்தோயச்

சேர்ந்தம னக்கருத் தின்படி செய்யுந்
தேவப் புனலஞ்சித்
திசைக்கப் பற்றிய வினையையு நீக்கிய
சிவகர தீர்த்தநிலைத்

தார்ந்துள புலிசைப் பதியுறு மயிலே
யாடுக வம்மனையே
யணிகிளர் செந்தா மரைமல ரார்கொடி
யாடுக வம்மனையே. (௧௦)

அம்மானைப்பருவ முற்றிற்று.



ஒன்பதாவது

## நீராடற்பருவம்.



அளவில்பகலடியனேன் செய்தநோன் பாலன்னை
யணுகினு ளணுகினுளென்
றறைதலொக் கக்கலித் திலகுசுடர் போற்புதிய
வம்போரு கத்தை யேந்தி

யளியுற்று வரிபாடு மற்றுமலர் களையுன்ற
னடிசூட்டல் போல வீசி
யாறுவழி படுதலொத் துத்தோன்ற நாமகளு
மாக்கமும் பிறசகி களுந்

தெளிவுமிகு நின்னருட் பௌவத்தி லாடிச்
சிறந்த புன லிலுமாடிடத்
தேவருல கடையாம லிவ்வுலகில் வாழடியர்
சேரவுயர் பதவி வந்த

விளிவிலெம் மன்னைகெடி லத்துறைகு டைந்தபுது
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடல நகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே. (க)



சீதநதி பாதிமதி யார்கொன்றை கூவிளஞ்
செஞ்சடா டவியி லாடச்
சேர்பத்தொ டாறுகலை நிலவைத்த ரந்தருகுழை
செவிதன்னி லிலகி யாட

வேதமவை சிவர்களை யடையாத படிபொதுவி
னிடைநின்று நடமியற்று
மேண்டோளனுங்கண்கள் கொண்டுகண் டாசையெனு
மிமிழ்திரைக் கடலினூடை

வேதமுறை யோதுமறை யோர்யாக சாலைகரை
மீமிசை விளங்கு நதியு
மினிருநின் பார்வைபார்த் தக்கருங் கடலிங்கு
மேவினகொ லோவென்றெண

மேதையில ருக்கரிய பெரியநா யகிபுதிய
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடல நகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே. (உ)



செய்யகய னின்கண்க ணோக்கியோ டவெண்மை
செறிசங்கு கண்ட நோக்கிச்
செய்வதறி யாமற்றி கைக்கவொளி நித்திலந்
திகழ்பல்லை நோக்கி வெட்க

நொய்யவல வன்கச்ச பஞ்சானு தாட்புற
நோக்கிநீ ரிடைய மூழ்க
நோதகவி லாதாடு மன்னமும் மிருதுநடை
நோக்கிவிண் ணிற்ப றக்கத்

துய்யமறை நான்குமா கமமெட்டு மிருபதுந்
தொன்மைப்பு ராண மெவையுஞ்
சொல்லரிய முதல்வத்து நீயன்றி யில்லெனத்
தோத்திரஞ் செயவி றங்கி

வெய்யகழு முட்கரத் தவரிடத் தவள்கெடில
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடல நகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே. (ந)

ஆதவன் மரபினி லுதித்தவர சன்றவத்
தாலந்தி வண்ண னேவ
வண்டருல கமுமிந்த மண்டலமு நன்மைபெற
வார்த்துவந் துற்ற புனலுஞ்

சீதவெட் சிப்புயக் கந்தனடி மறவாத
சிந்தைமுனி வன்கொ ணர்ந்த
சிறியகர கத்தினின் றொருவிவரு புனலுமரி
திருமேனி தனைநி கர்த்த

கோதற்ற நிறயமுனை நதிபுமுத லாவோது
குளிர்புனல்க டாழ மேன்மை
கொண்டுபெரு கிக்கலித் தேசெல்கெடி லத்துறை
குடைந்துநின் சகிமா ருடன்

வேதநெறி யுலகினர்க் கருள்பசுங் கொடிபுதிய
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடல நகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே. (சு)

மா லுதவி கொண்டவன் றுயில்கடலை மேலைநாண்
மந்தரத் தான்ம தித்து
மணியுமும் மதவாறு பாய்களிறு மிவுளியும்
வளமலிந் திட்ட தருவுஞ்

காலுமொளி மணியணித் தேனுவும் பெற்றநற்
கடவுளர் வருத்த மின்றிக்
காதலிற் பெறவளையு முத்தமும் பதுமமுங்
கடிமணியு மள்ளி யலையான்

மேலுலகு புகவிசி யுலகுக்கு மின்பீந்து
வேலைவயி றுங்கி ரப்ப
வேண்டுமென் றுன்னியதி வேகமொடு செல்கெடில
விரிமலர்த் துறைகு டைந்து

வேலினுக் கிறைவனுக் கமுதமூட் டியவனை
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடல நகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே (ரு)



ஆதார மாயுள்ள வானோர் பொருட்டா
வமைத்திடும் யாக குண்டத்
தழகா விருந்தேழு நாவுமாட் டிச்சொலித்
தாகுதிகள் யாவும் வாங்கிக்

கோதேது மனுகாம லவ்வமர ருக்குக்
கொடுத்துமுப் பெயர்ப டைத்த
கோமளாக் கினிநாம மதுபெற்று மிளிருநற்
குண்டத்தி னுக்கிறை வியே

மாதாப்பி தாக்களைக் கரையேற்றி மேலான
வழிகாட்டி யழிவி லாத
மாபதவி யிற்சேர்த் திடத்தக்க மக்களை
வணங்குவோர்க் கருளு மன்னே

வேதாந்த சாரமே கருணைப்பிர வாகமே
வெள்ளநீ ராடி யருளே
மெய்யான தெய்வமே பாடலநகர்க்கரசி
வெள்ளநீ ராடி யருளே. (சு)

வேறு

சிங்கா ரமதா கியபொற் சிகரத்
திகிரிக ளெட்டோடுந்
திகிரிகள் கைகொடு நின்றமெ னப்பொலி
சிந்துர மெட்டோடும்

வெங்கோ பப்பணி யெட்டோ டும்புகழ்
விரியத் திக்கருளு
மேலோர் முன்ன ரியற்றிய சீதள
மிகுகுண் டுக்கிறைவீ

மங்கா வொளிமா மணிகட் கிடமா
மகரா லயமேழும்
வளைதீ வெங்கும் பலமுறை நாடினு
மயலோர்க் கரியமணி

பொங்கேர் மாடப் புலிசைப் பதியவள்
புதுநீ ராடுகவே
புண்ணியர் நாடி வணங்கு மிளங்கொடி
புதுநீ ராடுகவே. (எ)

விழியைக் காத்திடு மிமையன விமவான்
மேனையொ டேநெஞ்சின்
விதனம் பாறிடு மெனமகிழ் வெய்தவு
மேலாம் வீடேறி

யழிவில் சுகமுற் றிடவுஞ்சாரலி
லவன்பா லிற்புக்க
வருமைக் கிளியே திரையிற் றிகழ்கெடி
லம்மென் பெயர்பெற் றுச்

சுழிமிக் குச்செலு நதிவள நோக்கித்
தோகைய ரொடுசேர்ந்து
துங்கத் துறையி லிறங்கியு லாவிச்
சுடர்முக மதிவீசப்

பொழிலிற் றிகழும் புலிசைப் பதியவள்
புதுநீ ராடுகவே
புண்ணியர் நாடி வணங்கு மிளங்கொடி
புதுநீ ராடுகவே. (அ)

புலமலி பிருதுவி யனல்வெளி காற்றுப்
புனலென் றுரைசெய்யும்
பூதமு மமுதச் சுடருந் துங்கப்
புரவித் தேரேறிக்

குலமலி மேருவை நிதமுஞ் சூழுங்
கோகன நாயகனுங்
குலவுறு முயிருங் கடிநீள் கொன்றைக்
கோலமு மாயடியர்

நலமலி யப்பல வுருவா யும்வரு
நாதன் றன்னெஞ்சி
நாடி யுவந்தெழு துஞ்சித் திரமே
னளிர்நீ கந்துயிலும்

பொலமலி கடகப் புலிசைப் பதியவள்
புதுநீ ராடுகவே
புண்ணியர் நாடி வணங்கு மிளங்கொடி
புதுநீ ராடுகவே. (கூ)



பன்னூறு நன்றி பிறர்க்குச் செய்வோர்
பரையருள் பெறுவரெனப்
பாரினில் வாழும் பெரியோ ரெல்லாம்
பகர்வா ரப்படியே

தன்னூறு நீரினை யுலகர்க் குதவித்
தாகத் தைத்தீர்த்துஞ்
சந்தத மும்மவ ருண்ணும் பலபொரு
டழையத் துணையாயு

மன்னூறு கெடிலத் திருநதி யதுநின்
மலரன சரணமுதன்
மைக்கே சம்பரி யந்தந் தீண்டி
மகிழ்ந்தரு ளைப்பெறவே

பொன்னூறு சிகரிப் புலிசைப் பதியவள்
புதுநீ ராடுகவே
புண்ணியர் நாடி வணங்கு மிளங்கொடி
புதுநீ ராடுகவே. (கo)

நீராடற்பருவ முற்றிற்று.



பத்தாவது.

## ஊசற் பருவம்.

வச்சிரப் பொற்பலகை தன்னினுற் கோடியினு
மாற்றடங் காத தங்க
வளையங்க ளிட்டவற் றுட்காந்தி கொண்முத்த
வடநுனியை யிறுக வார்த்து

மெச்சுமங் நான்குவட மற்றுநுனி யைச்சோதி
வீசுமா ணிக்க விட்ட
மேற்கட்டி யேசெய்த செந்துகிர்க் காலூசன்
மேலே யிவர்ந்து தங்கி

யுச்சிதச் செந்தாம ரைக்கோயி லிடைவாழு
மொண்டொடித் திருமக ளுட
னொப்பற்ற கலைமகளு முற்றசைத் துப்பாட்
டுரைத்திடச் சிரம சைத்துப்

பொச்சிலம் புகள்கலீ ரென்னுமெல் லடியினுய்
பொன்னூச லாடி யருளே
புலவர்திரு மறுகின்மிடை புலிசைவரு துங்கமணி
பொன்னூச லாடியருளே. (க)

திரைகளலை கின்றபாற் கடலினடு விடையாதி
சேடன்மேற் பள்ளி கொள்ளுந்
திருமேனி கரியவுரு வானமா லக்கடற்
றிரைசென்ற வழி தானுமே

மருவிமுன் சென்றுந்தி ரும்பத்தி ரும்பியு
மாறிமா றிக்க ணத்துள்
வருசெயலை நீயவற் குத்துணைவி யாதலான்
மாண்புடன் காட்ட லேபோ

லருவென்று மற்றையவி ரண்டென்று நினையோது
மனைவரும் பார்த்து மகிழ
வருமையுள பலகைநடு வுற்றலர்க் கைகளா
லலைவடமு றப்பி டித்தே

புரையற்ற கற்புநிலை காட்டியநற் பூவையே
பொன்னூச லாடி யருளே
புலவர்திரு மறுகின்மிடை புலிசைவரு தங்கமணி
பொன்னூச லாடியருளே. (௨.)



கண்டனைய மொழிமாதர் காதலொடு பாடுநற்
கானமுஞ் சங்க மொத்த
கண்டத்தி னெழுமிசையு மணிமகர யாழின்
கனிந்தவிசை யுங்க லந்து

மண்டுறக் காதினிடை மகிழுமவ் விந்திரன்
மனைவிநீ யூச லாடு
மாண்பினைத் தன்னேவல் புரிதோழி மாரொரு
மகிழ்ந்துபார்த் திடவந் தன

டண்டமிழ்ப் பாசுரம் பாடிநின் சகிமாதர்
தாம்வடங் களைய சைக்கச்
சாரமா கியபண்ணு நீபாடி யாங்களுஞ்
சந்தோட வாரி மூழ்கப்

புண்டரிக மேயவருந் தொண்டுசெ யறத்தலைவி
பொன்னூச லாடி யருளே
புலவர்திரு மருகின்மிடை புலிசைவரு தங்கமணி
பொன்னூச லாடி யருளே. (ரு)



என்னையெக் காலத்து முன்னியுந் திருநாம
மினியவாக் காலு ரைத்து
மிணையிலா மலரடி யிரண்டையு மிறைஞ்சியு
மெனதன்ப ரொடுகூ டியு

மின்னுமென் னுலையந் தன்னைவல மாகவே
மெய்ப்பத்தி யொடுசுற் றியும்
வீண்பொழுது போக்காம லெனதுமான் மியநூல்
விடாதுதின மும்ப டித்தும்

பின்னென் றிடாதபொருள் வேண்டுவோர்க் கருளியும்
பெருமைமிக் கோரென் னிரு
பிலிற்றுதேன் றாமரைப் பாதமடை குவரென்று
பேசுமாங் கோகி லம்மே

புன்னடையி லார்க்குநித மருள்செய்யு மடியளே
பொன்னூச லாடி யருளே
புலவர்திரு மருகின்மிடை புலிசைவரு தங்கமணி
பொன்னூச லாடி யருளே. (௬)



நீரினிற் பொலிகின்ற வாளைமீன் பாய்வுற்று
நெடியவான் முகட ளாவி
நிற்கும்ப லாமரக் கனிகீண் டிடச்சாடி
நிமிடத்து ளிலைசெ றித்து

காரினிற் றெரிதென்னை தன்றலையி லணியெனக்
காணுூதற் றட்ப மேய
காய்விழச் சாடியுயர் கடவுளர்செய் நோன்பினுற்
கந்நிறைந் தேகு மந்தச்

சீரினிற் கதியாற் றிடைத்தாவி யதனிடைத்
திரிகின்ற மீன்க ளோடு
சேர்ந்துவிளை யாடிமீண் டேவந்து வாழுஞ்
சிறந்தபெண் ணைக்கிறை வியே

போரினிற் புரிமுருக னைட்பெற்ற வன்னையே
பொன்னூச லாடி யருளே
புலவர்திரு மருகின்மிடை புலிசைவரு துங்கமணி
பொன்னூச லாடி யருளே. (ரு)

கழுகுக் கிடர்புரி களமுற் றிடுமணி
கதிர்போ லொளிவீசக்
கமலக் கைக ளிரண்டினு மேவிய
சங்கண மொளிவீச

விமையுட் டிகழ்விழி நடுவுற் றுளமணி
யிருபா லொளிவீச
விந்திர தனுநடு விடுபொட் டதுவு
மின்பிர பைவீச

விமலத் திருவடி புனைமணி நூபுர
மென்மே லொளிவீச
மின்னன விடையிற் பூட்டிய மேகலை
மிகவொளி தான்வீச

வமுதத் திரளே சுகுணக் கடலே
யாடுக பொன்னூச
லடியர்க் கெளியாய் புலிசைப் பெரியா
யாடுக பொன்னூசல். (௬)

மயல்செயு மடவா ரிடுபொட் டழகினு
மலைநேர் முலைமேலு
மதிமுக மண்டல வொளிமே லுங்கரு
மையிடு கண்மேலுங்

குயமிசை யிலகிய தரளவ டத்தொடு
கூடும் பணிமேலுங்
குலுக்கி நடந்திடு நடைமே லும்மயல்
கொண்டோ ருளநாடா

தியல்புறு நல்லோ ருள்ளக் கோயி
லிருந்தவ ரெண்ணம்போ
லீயுங் கற்பக தருவே யறநா
லெட்டும் வளர்த்தவளே

யயனரி பரவுஞ் சுகுணக் கடலே
யாடுக பொன்னூச
லடியர்க் கெளியாய் புலிசைப் பெரியா
யாடுக பொன்னூசல். (எ)

உவரலை புடைசூழ் மண்டல மமுத
லுலகிற் றெய்வங்க
ளனையொக் கும்மென விள்ளுதன் மாமா
மொக்குந் தருவெட்டி

சுவையமு தத்தை நிகர்க்குங் கழிநீர்
சுடர்மதி யேயொக்குந்
துன்னுமு டுக்கண மாமயி லொக்குந்
தோமுறு வான்கோழி

யவையெனல் போலும கத்தொளிர் வுறுகண்
ணுலுயர் தவர்காணு
மருமைப் பொருளே நாங்களெல் லோரு
மானந் தத்தாழ

வவனவ ளதுவா யிலகுஞ் சுடரே
யாடுக பொன்னூச
லடியர்க் கெளியாய் புலிசைப் பெரியா
யாடுக பொன்னூசல். (அ)



மணிதுறை மக்கள்து தித்துவ ணங்கும்
வாள்விண் மணிமுதலோர்
வலம்வரு நீண்மக மேருவு மெண்குல
வரைகளு மாடிடினும்

புண்ணியத் திரளென வொளிர்கயி லாயப்
புகழ்மலை யாடிடினும்
பொழுதரை நிமிடமு மாடா ஞானப்
புருடரு ளாடிடினு

மனுவெனு நேரமு மசையாப் பிரமம
தாகிய நின்கணவ
னசைவுற் றனைமிக வுந்தே டும்படி
யாசையை நீயூட்டி

யணிகட் கழகுசெய் வடிவுற் றொளிர்வா
யாடுக பொன்னூச
லடியர்க் கெளியாய் புலிசைப் பெரியா
யாடுக பொன்னூசல் (௯)

புரையுறு மெம்பவ நீங்கக் கமலம்
புரியடி தலைவைத்துப்
பொன்று மோக்கந் தருகவென் றனுதினம்
போற்றிப் பானின்று

நிரையொடு நின்னைவ ணங்குந் தோழியர்
நெகிழா மற்பூட்டு
நிழலிடு மணிக ளிழைத்த சரப்பளி
நீணன் மாலையுடன்

விரைமிகு பன்னிற மாமலர் கொண்டு
விதித்தன வும்மாட
மின்னற் கொடிதா னுடுத லேபோல்
விதனமெ லாம்போக்கி

யரைநொடி யாயினு மெமதுள மகிழ்தா
வாடுக பொன்னூச
லடியர்க் கெளியாய் புலிசைப் பெரியா
யாடுக பொன்னூசல். (௧௦)

ஊசற்பருவ முற்றிற்று.

திருப்புலிசைப் பெரியநாயகி பிள்ளைத்தமிழ் முற்றுப்பெற்றது.



சிவமயம்.

# திருப்பாதிருப்புலியூர்ப்
# பாடலேசர் தோத்திரம்

அகிலமீ தனங்கன் கணைகளால் வருந்தி யறிவிழந் தரிவையர் மோக
நகிலமே யெனது நயனங்க ளிரண்டு நலமிலா மனத்தொடு பாய
வகிர்பிள வதனுள் வீழ்ந்திட நாடி மயங்கினே னுய்வகை யறியேன்
ட மைசேர் புலிசைக் கரசியை மணஞ்செய் வள்ளலே வந்துகாத்
[தருளே. (க)

விதிமுறை தெய்வத் தச்சனு லமைத்த மேலெழு விமானகோ புரமுங்
கதிர்விடு நவமா மணிகளா லிழைத்த கனகமா ளிகைப்பெரு வீடு
மெதிரெதிர் நின்ற வானக மளக்க விரவிபொன் மலையெனத் திகைக்கு
மதில்வளை புலிசைக் கரசியை மணஞ்செய் வள்ளலே வந்துகாத்
[தருளே. (உ)

இறையள வேனும் புத்தியில் லாம லெவ்வளவோ கொடியபா வங்கட்
குறைவிட மானே னியமனுள் வருங்கா லுய்வகை சற்றுநா னறியே
னிறைபலன் பழுத்த பாதிரி விருக்க நீழல்வீற் றிருந்தநா யகமே
மறைநிறை புலிசைக் கரசியை மணஞ்செய் வள்ளலே வந்துகாத்
[தருளே. (ங)

எளளவ தேனு மான்கள்பொற் கரத்தி லிட்டுணு கிடர்நிறை மடவார்க்
களவிலா துதவி யவர்புரி மாயத் தழுந்தினே னணிதுகின் மறைத்த
பளமதில் வீழ்ந்தே னெழமுடி யாமற் பாவியேன் பரதவிக் கின்றேன்
வளமலி புலிசைக் கரசியை மணஞ்செய் வள்ளலே வந்துகாத் தருளே.()

நீண்டதே வாரப் பண்ணெனு மலங்க னிறைந்தசை புயங்களின்
[முத்துத்
தாண்டவர் முதலோர் கவிபல விசைத்துச் சாத்தினர் தமியனு
[மவர்போ
லீண்டிதை யிசைத்தே னேழையே னுய்ய விதனையு மின்பமாய்ப்
[புனைந்தே
மாண்டிகழ் புலிசைக் கரசியை மணஞ்செய் வள்ளலே வந்துகாத்
[தருளே. (ரு)

பாடலேசர்தோத்திர முற்றுப்பெற்றது.

பாடலேசர் துணை.

